# சிந்தனைச் சுற்றுலா

தேசிய விருது பெற்ற பேராசிரியர்
பல்கலைப் பேரறிஞர்
டாக்டர். எஸ். நவராஜ் செல்லையா
M.A., M.P.Ed., Ph.D., D.Litt., D.Ed., FUWAI



விளையாட்டுப் பதிப்பகம்
'லில்லி பவனம்'
8/1, போலீஸ் குவார்ட்டர்ஸ் ரோடு,
தி. நகர், சென்னை – 600 017.
தொலைபேசி: 4342232

# நூல் விபர அட்டவணை


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | சிந்தனைச் சுற்றுலா |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | சிந்தனை - கட்டுரைகள் |
| ஆசிரியர் | : | டாக்டர். எஸ். நவராஜ் செல்லையா (1937-2001) |
| பதிப்பு | : | முதல் பதிப்பு - டிசம்பர் 2001 |
| நூலின் அளவு | : | கிரவுன் |
| படிகள் | : | 1200 |
| அச்சு | : | 12 புள்ளி |
| தாள் | : | வெள்ளை |
| பக்கங்கள் | : | 96 |
| நூல்கட்டுமானம் | : | அட்டைக்கட்டு |
| **விலை** | : | **ரூ. 20-00** |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| வெளியிட்டோர் | : | விளையாட்டுப் பதிப்பகம்<br>8/1, போலீஸ் குவார்ட்டர்ஸ் ரோடு<br>தி.நகர், சென்னை - 600 017.<br>தொலைபேசி: 4342232 |
| அச்சிட்டோர் | : | எவரெடி பிரிண்டர்ஸ்<br>தி. நகர், சென்னை - 600 017.<br>தொலைபேசி: 8252271 |

## ஆசிரியரின் பிற நூல்கள்

01. விளையாட்டுக்களின் விதிகள்
02. விளையாட்டுக்களின் கதைகள்
03. விளையாட்டுக்களில் வினோதங்கள்
04. விளையாட்டு உலகில் வீரக் கதைகள்
05. வழிகாட்டும் விளையாட்டு வீரர்கள்
06. விளையாட்டுக்களில் சொல்லும் பொருளும்
07. விளையாட்டுக்களில் வினாடி வினா-விடை
08. விளையாட்டு உலகில் சுவையான சம்பவங்கள்
09. விளையாட்டுத் துறையில் பொது அறிவு நூல்
10. விளையாட்டு விழா நடத்துவது எப்படி?
11. விளையாட்டுக்களுக்குப் பெயர் வந்தது எப்படி?
12. விளையாட்டுக்களின் வரலாறும் வழிமுறைகளும்
13. விளையாட்டுத் துறையில் கலைச் சொல் அகராதி
14. விளையாட்டுத் துறையில் ஆங்கிலம், தமிழ், அகராதி
15. நலமே நமது பலம்
16. உடற்கல்வி என்றால் என்ன?
17. உலக நாடுகளில் உடற்கல்வி
18. உடலழகுப் பயிற்சி முறைகள்
19. உடற்கல்வியைக் கற்பிக்கும் முறைகள்
20. தேகத்தை தெரிந்து கொள்வோம்
21. பெண்களும் பேரழகு பெறலாம்
22. ஒரு நூறு சிறு விளையாட்டுக்கள்
23. பேரின்பம் தரும் பிராணாயாமம்
24. பயன்தரும் யோகாசனப் பயிற்சிகள்
25. பலம் தரும் பத்து நிமிடப் பயிற்சிகள்
26. இந்திய நாட்டுத் தேகப் பயிற்சிகள்
27. நீங்களும் உடலழகு பெறலாம்
28. நீங்களும் ஒலிம்பிக் வீரராகலாம்
29. நீங்களும் உயரமாக வளரலாம்
30. நீங்களும் வலிமையோடு வாழலாம்
31. நீங்களும் நோயில்லாமல் வாழலாம்
32. நீங்களும் மகிழ்ச்சியோடு வாழலாம்
33. நீங்களும் இளமையாக வாழலாம்
34. உடலுக்கு அழகு தரும் எடைப் பயிற்சிகள்
35. உடல் எடையும் உணவுக் கட்டுப்பாடும்

71. சிந்தனைச் சுற்றுலா
72. சிந்தனைப் பந்தாட்டம்
73. அவமானமா? அஞ்சாதே!
74. அனுபவக் களஞ்சியம்
75. பாதுகாப்புக் கல்வி
76. கைப்பந்தாட்டம்
77. கால்பந்தாட்டம்
78. கூடைப்பந்தாட்டம்
79. பூப்பந்தாட்டம்
80. வளைகோல் பந்தாட்டம்
81. வளையப்பந்தாட்டம்
82. மென் பந்தாட்டம்
83. சடுகுடு ஆட்டம்
84. கோ கோ ஆட்டம்
85. நல்ல கதைகள் பாகம் I, பாகம் II, பாகம் III
86. மாணவர்க்கேற்ற மேடை நாடகங்கள்
87. வேஷங்கள் விளையாடுகின்றன (சிறுகதைகள்)
88. பண்புதரும் அன்புக் கதைகள்
89. நல்ல பாடல்கள்
90. நல்ல நாடகங்கள்
91. நவரச நாடகங்கள்
92. நவனின் நாடகங்கள்
93. சுவையான நாடகங்கள்
94. தெய்வ மலர்
95. நல்ல நல்ல கதைப் பாடல்கள்
96. செங்கரும்பு (கவிதைத் தொகுப்பு)
97. கடவுள் கைவிட மாட்டார்
98. மனைவியுடன் மகிழ்ச்சியாக வாழ்வது எப்படி?
99. Quotations on Sports and Games
100. General Knolwedge in Sports and Games
101. How to break ties in Sports and Games?
102. Physical Fitness and Health

# பொருளடக்கம்

அனுபவங்கள் ஏராளம், ஏராளம், படித்து பெற்ற அறிவினை விட; பட்டுப்பட்டுப் பெற்ற நல்ல ஞானமே, இன்று இந்த நூலை எழுதும் துணிவினை அளித்தது.

ஆங்காங்கே பெற்ற அனுபவங்களின் அனுகூலங்கள். அதிசய குணாதிசயங்களின் ஆரோகணங்கள், அற்புதங்களின் ஆலோலங்கள். கற்பனைகளின் காணாமிர் தங்கள். எல்லாவற்றையும் என் இலட்சியத்துறையான விளையாட்டுத் துறையுடன் சேர்ந்து சிந்தனை செய்து பார்த்தேன்.

எந்தன் சிந்தனைகளில் சுற்றுலாவோ சொர்க்கத்திற்கும் நரகத்திற்கும் கூட சொல்லிக் கொள்ளாமல் போய் வந்து விட்டன.

இது ஒரு சுகமான சுற்றுலா. சுவையான சுற்றுலா படிப்பவர்களுக்கு பலப்பல அனுபவங்களை ஊட்டும் சுற்றுலா, எனவே, நீங்கள் சுற்றுலா செல்ல, சற்றே முன் வந்து விட்ட பிறகு, உங்களிடம் பொறுப்பை ஒப்படைத்து விட்டு, நான் உங்களையே பார்த்துக் கொண்டிருக்கிறேன். இந்த சுற்றுலா உங்களுக்குப் பிடித்திருந்தால், மேலும் பல சுவையான சிந்தனைக் களஞ்சியங்களை தொடர்ந்து தர இருக்கிறேன். என்பதை மட்டும் உங்களிடம் கூறி மகிழ்ச்சி கொள்கிறேன்.

இந்நூலை அழகாக வெளியிட்ட பதிப்பகத் தாருக்கும் ஆக்க வேலைகள் செய்த ஆர். ஆடம் சாக்ரட்டீஸ் அனைவருக்கும் என் நன்றி.

அன்புடன்,

**டாக்டர். எஸ். நவராஜ் செல்லையா**

# முன்னுரை

சிந்தனைச் சுற்றுலா என்னும் இந்த நூல், ஒரே இடத்தில் உட்கார்ந்து எழுதப்பட்ட நூல் அல்ல.

உண்மையிலேயே பல மாவட்டங்களுக்கும், மாநிலங்களுக்கும் சுற்றுலா செல்லும் வாய்ப்பு ஏற்பட்டபொழுது, நான் சென்ற இடங்களில் ஏற்பட்ட அனுபவங்களை நினைத்து நினைத்து எழுதி முடிக்கப் பெற்றதாகும்.

''ஏதோ எழுதினோம், பிறர் புத்தகம் போட்டார்கள். பணம் கிடைத்தது. அவர்கள் விற்பனை செய்தார்கள். பயன் பெற்றார்கள்!'' என்ற நிலை என்னைப் பொறுத்த வரையில் இதுவரை ஏற்படவில்லை.'

புதிய துறையான விளையாட்டுத்துறைக்கு புத்தகம் எழுதப் போய், பதிப்பிக்கின்ற பொறுப்பும், வெளியிடும் வேலையும், விற்பதற்காக அமைந்த வேதனைகள் எல்லாமே என்னை விடாமல் பற்றிக் கொண்டு விட்டன.

ஏற்றுக்கொண்ட இலட்சியத்திற்காக, நானே எல்லாப் பொறுப்புக்களையும் சுமந்து கொண்டேன். அவற்றை சுமை என்று நினைக்கவில்லை. எனக்கு அவை சுகமாகவே அமைந்து விட்டன.

பல்வேறு சூழ்நிலைகளில், பல்வேறுபட்ட குணாதிசயங்கள் கொண்ட மனிதர்களுடன் பயணம் செய்ய நேரிட்டது. பழகும் வாய்ப்பு ஏற்பட்டது. பிரச்சினைகளை பரிமாறிக் கொள்ளும் பக்குவம் எல்லாமே எனக்குக் கிடைத்தது.

வியாபாரத்தில் ஏற்பட்ட இழப்புக்கள் அதிகம் என்றாலும், என் உள்ளம் எடுத்துக் கொண்ட

# 1. வேறு வழி இல்லை

மண்ணால் ஆன குடம் ஒன்று இருக்கிறது. அதில் நிறைய நீர் ஊற்றி வைக்கப்பட்டிருக்கிறது. அது முழுதாக இருக்கிறது என்பதும் நமக்குத் தெரிகிறது.

நேரம் ஆக ஆக, நாமும் மட்குடத்தை மறந்து விடுகிறோம். பிறகு ஒருமுறை சென்று பார்க்கிறோம். குடத்தில் நீர் குறைந்திருக்கிறது.

'குடம் ஓட்டை இல்லையே! பின் எப்படி குறைகிறது' என்று யோசிக்கிறோம். கசிவு குடத்தில் இருக்கிறது என்று உணர்கிறோம்.

நீரைப் பயன்படுத்தினாலும் பயன்படுத்தாவிட்டாலும், நேரம் ஆக ஆக, நீர் குறைந்துகொண்டே வருகிறது. பின்னர் நீரில்லாத மட்குடமாக மாறுகிறது. விரிசல் பெறுகிறது. வீணாகிப்போன உடைந்த பாண்டமாக மட்குடம் போகிறது.

நம் உடலாகிய குடமும் இப்படித்தான்.

உடலாகிய குடத்தில் சக்தி என்னும் நீர் நிரப்பப்பட்டிருக்கிறது. நாளாக நாளாக நீர் என்கிற சக்தி குறைந்து கொண்டுதான் வருகிறது. சக்தியைப் பயன்படுத்தினாலும் பயன்படுத்தா விட்டாலும், சக்தி குறையும், மறையும்.

நீர் நிறைந்த முழுக்குடம் என்பது நமது இளமைக் காலம்தான். அந்த நேரத்தில் நம் சக்தியைப் பயன்படுத்தி, செயற்கரிய செயல்களைச் செய்யத் திட்டம் தீட்ட வேண்டாமா! செயல்பட வேண்டாமா!

சக்தியின் பெருமை புரியாமல், தூங்கித் தொலைக்கலாமா? சோம்பிப் பொழுதைக் கழிக்கலாமா? இன்று இருக்கும் வேகம் நாளை இருக்கும் என்பது என்ன நிச்சயம்?

'நாமும் பயன் பெறுவோம், நாட்டுக்கும் பயன் படுவோம்' என்று சக்தியைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டாமா!

குடம் காலியான பிறகு குதித்து என்ன பயன்? தன்னையே கோபித்துக் கொள்வதில் என்ன லாபம்! கையில் இருக்கும்பொழுது, கவனத்துடன் காரியம் ஆற்றுபவர்களே இன்பம் அடைகிறார்கள். புகழ் பெறுகின்றார்கள். இணையில்லாத சரித்திரம் படைக்கின்றார்கள்.

இருப்பதை பயன்படுத்தத் தெரியாதவனுக்கும் எதுவுமில்லாத அடிமரத்துக்கும் என்ன பேதம் உண்டு?

நமக்குத் தெரியாமல், இந்த உலகில் நம்மையறியாமல், நாம் வாழ வந்துவிட்டோம்! வாழ்ந்துதான் ஆகவேண்டும்!

ஏற்கனவே வந்தவர்கள் இங்கே வாழ்ந்து கொண்டிருக்கின்றார்கள்.

உலகிற்கு வரப்போகிறவர்களை, வந்திருப்பவர்கள் வரவேற்கக் காத்துக் கொண்டிருக்கின்றார்கள்.

வந்தவர்கள், வருபவர்கள், எல்லோரும் நம்பிக்கையுடன் வாழ்க்கையில் ஒரு பிடிப்புடன் வாழ்ந்தே ஆக வேண்டும்!

வாழ வேண்டும் என்றால் வருமானம் வேண்டுமே! ஏதாவது ஒரு வேலை செய்துதான் ஆகவேண்டும்!

வேலையை தொழில் என்கிறோம்... தொழில்தான் வாழ்க்கைக்குத் துணையாக வருகிறது.

தொடர்ந்து வரும் துணையான 'தொழிலை' நாம் எதிர் பார்த்திருக்க மாட்டோம்! ஏன்! நாம் விரும்பியது ஒன்று.

நம் தலையிலே கட்டப்பட்டது இன்னொன்று!

என்றாலும் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டியிருக் கிறது!

வயிறு கழுவ மட்டுமல்ல! வருமானம், அவமானம் இன்றித் தன்மானத்துடன் தலைநிமிர்ந்து வாழவும்தான். அன்புக் குரியவர்களே, இரத்த பாசங்களை, பாசபந்தங்களின் பிரதி பிம்பங்களை வளர்க்கும் பணிக்கு அடித்தளமாக, ஆதாரமாக இந்த வேலையே உதவுகிறது.

அத்தகைய ஆருயிர் தொழிலில், அன்றாடப் பணியில்தான் நாம் ஈடுபட்டிருக்கிறோம்.

பிடிக்காத வேலையாக இருக்கலாம். பிரச்சினை அது அல்ல! ஒரு வேலையில் இருக்கும்வரை, நாம் வேலை செய்தே ஆக வேண்டும். வாழ்க்கையை வாழ்வதுபோல, வாழ முயற்சிப்பது போல.

இந்தத் தொழிலிலிருந்து வேறு வேலைக்குப் போகும் வரை, தொடர்ந்து பணியாற்றும்வரை, தூய்மையுடன் பணியை செய்ய வேண்டும். செய்தாக வேண்டும்!

தூய்மையாக செய்யும் பணிக்கு, அந்தத் தொழிலில் நம்பிக்கை வேண்டும்.

ஈடுபட்டிருக்கும் வேலையை மனதார விரும்ப வேண்டும்.

இன்னொருவர் குறை சொல்லாத அளவுக்கு வேலையில் ஈடுபாடு காட்டவேண்டும். பாடுபட வேண்டும்.

உலகில் உள்ள எல்லோருக்குமே விரும்பிய வேலைதான் கிடைத்திருக்கிறது என்று நீங்கள் நம்பினால், அது தவறான கருத்தாகும்.

என்றாலும், எல்லோரும் இப்படித்தான் எண்ணி வேதனைப்பட்டுக் கொண்டிருக்கின்றார்கள். பெற்ற ஒரு வேலையை பிரியமானதாகக் கருத வேண்டும்.

**பெருமையாக நினைக்க வேண்டும்!**
**பேரன்புடன் அதில் ஈடுபட வேண்டும்!**
**நம்பிக்கையுடன் முன்னேற வேண்டும்!**

**'செய்யும் தொழிலே தெய்வம்'** என்பது எத்தனை உண்மை. உண்மையான உழைப்புக்கு என்றும் மரியாதை உண்டு.

உரியகாலத்தில் உங்களுக்கும் புகழ்வரும், பொருள் வரும். எதிர்பார்க்காத எல்லா இன்பமும் கைகூடும்!

அதுவரை, ஏற்றிருக்கும் தொழிலை உண்மையுடன் செய்யப் பழகுவோம்.

வேறு வேலைதான் வேண்டும் என்றால், அதுவரை காத்திருக்க வேண்டும். வேறு வழியே இல்லை.

இன்றைக்கு செய்யும் தொழிலில் மதிப்பு வைத்து, செயற்கரிய செய்வோம். அதுவே சிறந்தவர்களின் செயலாகும்.

# 2. நானே நான்

அது ஒரு வித்தியாசமான வகுப்பறை, மரத்தடியில் நடக்கும் வகுப்பு. கருத்துடன் கற்றுக்கொள்ள வேண்டும் என்று வகுப்புக்கு வந்து கவனத்துடன் அமர்ந்திருக்கும் மாணவர்கள்.

வீணே பொழுதை போக்கி விடாமல், விருப்பத்துடன் கற்றுத் தரவேண்டும் என்ற மனத்துடன் ஆர்வமாக முன்னே வந்து நிற்கும் ஆசிரியர்.

ஆசிரியர் இன்னும் வகுப்புக்கு வரவில்லை. அவர் கேட்ட கேள்விக்கு விடை எப்படி அளிப்பது என்பதுபற்றி மாணவர்களுக்கு இடையே ஒரு பிரச்சினை தலைக்காட்டிக் கொண்டிருக்கிறது.

ஆசிரியர் வந்ததும் பதிலைக் கேட்பாரே! எப்படி சொல்வது என்ற யோசனைக்குள்ளே நீந்தி நிலைமாறிக்கொண்டிருந்தார்கள் அந்த மாணவர்கள்.

ஆசிரியரும் வகுப்புக்கு வந்துவிட்டார். மீண்டும் அமைதியே அங்கு நர்த்தனம் ஆடிக்கொண்டிருக்கிறது.

''நேற்று நான் கூறியது உங்களுக்கு நினைவிருக்கும், நரகம் மோட்சம் பற்றியெல்லாம் நேற்று விரிவாகக் கூறினேன், அந்த இன்ப உலகத்திற்குப் போவதற்கு யார் யார் தகுதியாளர்கள் என்பதுபற்றியும் கூறினேன். இப்பொழுது நீங்கள் யார் யார் அந்த குணங்களைப் பெற்றிருக்கின்றீர்கள்? யார் யார் என்று அறிய நான் விரும்புகிறேன்'' என்று ஆசிரியர் வகுப்பை ஆரம்பித்தார்.

''நான் யோசித்துப் பார்த்தேன்: எனக்கு அந்தத் தகுதியில்லை'' என்று பலர் எழுந்து கூறாவிட்டாலும், ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்ட விதம், அப்படி கூறாமல் கூறிக் கொண்டிருந்தது.

''யாருமே போக முடியாது சார்'' என்று ஒரு மாணவன் துணிச்சலாகக் கூறிவிட்டு, 'எழுந்த சுவடு தெரியாமல்' உட்கார்ந்து விட்டான்.

ஆசிரியர் முகத்தில் மாற்றங்கள் பல தோன்றி மறைந்தன.

''நான் போனால் போவேன் சார்'' என்று ஒரு சத்தம் கேட்டு அடங்கியது. எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள்.

சத்தம் போட்டு சொல்லிய மாடு மேய்க்கும் சிறுவன் ஒருவன். அந்த இடத்தை விட்டு ஓடிக் கொண்டிருந் தான். மரத்தடி வகுப்பில் உட்காராத மாணவன் அவன். வேலி ஓரத்தில் நின்று மாட்டுக்குக் கண்ணையும், வகுப்புக்குக் காதையும் கொடுத்துக் கொண்டிருந்தவன் அவன்.

ஆசிரியர் கனைத்தார். மாணவர்கள் நிமிர்ந்து உட்கார்ந்தனர். அதோ ஓடுகிறானே! அவன் சொன்ன பதிலைக் கேட்டீர்களா! என்றார். ''ஆமாம்'' என்பதற்கு பதிலாக, சிரிக்கத் தொடங்கினார்கள் அவர்கள்.

''நான் சிரிப்பதற்காக உங்களிடம் சொல்லவில்லை, சிந்திப்பதற்காகச் சொன்னேன், மோட்சத்திற்குப் போக வேண்டும் என்றால் ஊசிமுனையில் ஒட்டகம் நுழைவது போல்தான். ஆனால் நல்ல குணங்கள் உள்ளவர்கள் தான் அங்கே போக முடியும் என்பது வழி வழி வரும் நம்பிக்கை.''

அந்த மாடு மேய்க்கும் சிறுவன் கூறினானே கேட்டீர்களா! ''நான் போனால் போவேன்'' என்று, அதுதான் உண்மை. நான் எனும் அகந்தை போனால், நானும் போவேன் என்றுதான் அந்தச் சிறுவன் கூறினான்.

நான் என்கிற திமிர், **மமதை, கர்வம், அகங்காரம், ஆணவம்** ஒருவரிடம் இருந்து போனால்தான், **அன்பு, அடக்கம், அமைதி, அறிவு, பற்று, பாசம், பண்பு, பணிவு,** எல்லாம் வரும். அவர்களே பிறருக்கு உதவும் பண்பாளர் களாக, அனைவரையும் மதிக்கும் அன்பாளர்களாக வாழ்வார்கள் என்று கூறிமுடித்தார் ஆசிரியர்.

வாழ்க்கையில் மேன்மை பெற, வீடு பெற, நான் எனும் குறை போனால்தான் முடியும். அதே நிலையில்தான் விளையாட்டு உலகிலும், நான் என்ற திமிர் இல்லாத ஆட்டக்காரர்களிடம் தான். அத்தனை திறமைகளும் ஜொலிக்கும். முன்னேற்றம் தரும். நாம் என்ற ஒற்றுமை உணர்வை வளர்த்து உறவை புதுப்பிக்கும். பலப்படுத்தும்.

நான் என்று திரிபவர்கள் நாளாக நாளாக பிறரால் பழிக்கப்படுகின்றார்கள். அவரது திறமையும், பெருமையும், புழுதியில் விழுந்து வெண்ணெயாகப் போகிறது. ஆகவே '**நான்**' என்பதை மாற்றுவோம். '**நாம்**' என்று கூறுவோம். ஒன்று **சேருவோம்** செழித்து வளர்வோம். வாழ்வோம்.

இதுதான் முன்னேறுவதற்கான உண்மையான வழியாகும்.

# 3. காலமும் கோலமும்

இது ஒரு மாதிரியான கதை.

கற்பனையின் சிகரத்திற்கே இது போகிறது என்றாலும், இது நம் வாழ்க்கையின் அன்றாட நிலையை சுட்டிக் காட்டி செல்லுவதால் தான், நம் சுற்றுலாவில் இதனை இணைத்திருக்கிறோம்.

கடவுள் மனிதரைப் படைத்து, மற்ற விலங்கினங்களையும் படைத்து, அவர்களுக்கு எத்தனை ஆண்டுகள் வாழ வேண்டும். என்று வயது உச்ச வரம்புகட்ட முயன்றாராம். அதற்காக, மனிதர் மற்றும் பல விலங்குகளையும் வரவழைத்தாராம்.

மனிதன், விலங்கினத்தில் மாடு, மற்றும் குரங்கு, பறவையினத்தில் ஆந்தை என்பதாக அங்கே ஆர்வத்துடன் வந்திருந்தார்கள்.

எல்லோருக்கும் உச்ச வயது வரம்பு 20 ஆண்டுகள் தான் தந்திருக்கிறேன் என்றாராம் கடவுள். மற்றவைகள் தலையாட்டி மகிழ்ச்சியைத் தெரிவித்தன. மனிதன் அதனை ஒப்புகொள்வானோ!

அவன் திருப்தியடையவில்லை. அதனால் முகத்தை அஷ்ட கோணலாக்கித் தொங்கப் போட்ட வாறு, தன் எதிர்ப்பைத் தெரிவித்துக் கொண்டான்.

20 ஆண்டுகள் எனக்கு போதாது என்றான்.

அவனை பரிதாபமாகப் பார்த்தார் இறைவன். இன்பமாக கவலையில்லாமல், சுகமாக வாழ

20ஆண்டுகள் போதாதா என்று கேட்டு, அவன் மனதை மாற்றப் பார்த்தார், எதற்கும் அடங்காத மனிதன் மசியவில்லை.

அவனைப் பார்த்த மாட்டுக்கு என்னவோ போல் இருந்தது. 'என்னுடைய 20 வயதையும் நீ எடுத்துக் கொள்' என்றது. இறைவன் தலையசைத்து சம்மதித்தார்.

40 ஆண்டுகள் வாழலாம் என்றாலும். அந்த மனிதன் நெஞ்சத்தை அது மகிழ்விக்கவில்லை. மீண்டும் சோகரசமானான்.

அவனைத் திருப்தி படுத்திட முடியாதா என்ற நிலையில், குரங்கு அவனைப் பார்த்து, 'என்னுடைய வயதையும் நீயே எடுத்துக் கொள்ளேன்' என்றது.

'ம்' என்றான். ஏற்றுக் கொண்டது மனம், என்றாலும் 60 வயதுதானே! என்பது போல அவன் ஆசை சவ்வு மிட்டாய்போல இழுத்துக் கொண்டு போனது.

ஆந்தை பார்த்தது, அது மட்டும் விதிவிலக்கா!

தானும் தன் 20 ஆண்டுகளைத் தருவதாக சம்மதித்தது. 80 ஆண்டு காலம் இனிதாக இரு என்றன. பிறகு வாழ்த்திச் சென்றன.

ஆனால் பாருங்கள்! மனிதன் தன் 20 வயது காலம் வரை இளமையோடு மட்டும் வாழவில்லை. இனிமையாக வாழ்கிறான். கவலையும் கலக்கமும், குடும்பச் சுமையும், வாழ்க்கையும் என்ற எந்த விதமான பிரச்சினைகளும் இல்லாமலே வாழ்கிறான்.

அதற்குப் பிறகுதான் அவனது கடமை தொடங்கு கிறது. குடும்பம் ஏற்படுகிறது. சுமை ஏறுகிறது. சுமை மாறுகிறது. குடும்பத்தைக் காக்க மாடாக உழைக்கிறான். பிழைக்கிறான். தன் சக்தி முழுவதையும் பயன்படுத்தி, இரவு பகலாக உழைக்கிறான்.

நாற்பதும் கழிகிறது, நாலாவித பிரச்சினைகள் அவனை, அல்லோலகல்லோலப் படுத்துகின்றன. உடலிலே நலிவு. உள்ளத்திலே துன்பத்தின் தினவு. அங்குமிங்கும் அலைகிறான். குரங்கு மனம் படைத்த வனாகக் குதிக்கிறான். குதர்க்கமாகப் பேசுகிறான். குறுக்கு வழிகளை கையாளுகிறான். குரங்கின் கையிலே கிடைத்த மலர் மாலையாக அவனது வாழ்க்கை முறை அமைகிறது. குரங்கு வாழ்க்கைதானே அது!

அறுபதும் வருகிறது. உடலில் ஆண்மையும் ஆளுமையும் குறைகிறது. வாழ்வின் ஓட்டமும் ஆட்டமும் அடங்குகிறது. வீடு, நாடு முழுவதும் வளையம் வந்த உடல். ஒரு மூலையைத் தேடி அடைகிறது. இல்லை. அவனது வாரிசுகள் ஒரு மூலையில் உட்கார வைத்து விடுகின்றனர்.

பொந்திலே ஆந்தை அமர்ந்து விழிப்பதுபோல, அடங்கி ஒடுங்கி இருப்பதுபோல அவனது காலம் கழிகிறது.

மனிதனாக இருக்க வைத்தது 20. மாடாக உழைக்க வைத்தது 40. குரங்காகக் குதிக்க வைத்தது 60. ஆந்தையாக அடங்கி விட்டது 80.

மனிதனாக இருக்கும்பொழுது. அதாவது இளைஞனாக இருக்கும் பொழுதே நல்ல வழிகளில், நல்ல முறைகளில், வாழ்க்கையை அமைத்துக் கொண்டால், மாடும், குரங்கும், ஆந்தையும் உடலில் வந்து போகுமே தவிர, வதைத்து விடாது. அதனால்தான், இளமையில் உடலைக்காப்பவர்கள். முதுமை வந்தாலும் இது போன்ற துயரங்களை அடைவதில்லை என்பார்கள்.

இந்தக் கதை கற்பனைக்கும் அப்பாற்பட்டது தான் என்றாலும், மனித வாழ்க்கையைப் பார்க்கும் பொழுது அப்படித்தான் அமைந்திருக்கிறது. வாழ்க்கை முறையை நன்கு அனுபவித்த யாரோ ஒருவர் இட்டுக் கட்டிய கதையாகக்கூட இருக்கலாம்.

கதையை மறப்போம். கருத்தை நினைப்போம். இளமையை நினைப்போம். வலிமையை வளர்ப்போம். வாழ்வை முயற்சியுடன் இணைப்போம். கடமையுடன் வாழ்ந்தே காலத்தை சுவைப்போம்.

இளமையில் உடலைக் காப்பது அறிவுள்ளோர் செயல். இளமையில் உடலை வதைப்பது முட்டாளின் செயல். நாம் அறிவுள்ளவர்களாக வாழ்வோமே!

# 4. எங்கே நிம்மதி

அந்த வீடு வெறிச்சோடிக் கிடந்தது. வீட்டிலே இருந்த பெண்கள் மூலைக்கொருவராக உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். சந்தோஷ சாகரம் என்று சகலராலும் பாராட்டப்பட்ட அந்த வீட்டில், அப்படி என்ன நடந்துவிட்டது?

ஒரு வாரமாக இப்படித்தான் இருக்கின்றார்கள். வீட்டின் தலைவர் வேலவன் எவ்வளவோ சொல்லிப் பார்த்து விட்டார். அந்த வீட்டுப் பெண்மணிகள் கேட்கவே இல்லை.

கலங்கிய கண்களும் சிந்திய மூக்குமாக சிந்தை கெட்டுக் கிடந்தார்கள். சாப்பாட்டைக்கூட சம்பிரதாயத் துக்காக வயிற்றுக்கு அனுப்பி வைத்தார்கள். இப்படியே போனால் படுத்த படுக்கையாகி விடுவார்கள் என்று பயந்து போனார் வேலவன்.

வேலவன் தன் தாயாரைப் பார்த்தார். தன் மனைவியைப் பார்த்தார். சேதி அறிந்து சமாதானம் சொல்ல வந்த சகோதரிகளைப் பார்த்தார். எல்லோரும் நிலைகுலைந்து கிடந்தார்கள். எதையோ பறிகொடுத்தவர்கள் போலத்தான் இருந்தார்கள்.

பறிபோவதா! ஆமாம்! பாத்திரங்கள் சில பறிபோயிற்று. பறித்துக் கொண்டு பறந்தோடியவன் அவர்கள் வீட்டிலே கடந்த இருபது ஆண்டுகாலமாக வேலை செய்து வந்த வீராசாமி.

பாத்திரங்கள் வெள்ளியால் ஆனவை. ஏதோ இந்த காலத்து விலைப்படி 500 ரூபாய் பெறும். ஆனால்

அதுவல்ல முக்கியம். அவை அவர்கள் பாட்டன் சொத்து என்பதாக பேசிக் கொண்டார்கள்.

பாத்திரங்கள் போய்விட்டன. அந்த வீட்டின் சந்தோஷமும், சகஜமான வாழ்க்கையும் அதோடு கூடவே போய் விட்டன.

வேறு பல பாத்திரங்கள் வாங்கித் தருவதாகச் சொல்லிப் பார்த்தார் வேலவன். முடியாது என்று மறுத்து விட்டார்கள். வேறு ஊருக்காவது போய் வரலாம் என்று கூப்பிட்டுப் பார்த்தார். வேதனை அதனால் தீராது என்று ஒதுங்கிக் கொண்டார்கள்.

வேறு வழியில்லாமல், விடிவு காலம் வராதா வேதனை தீராதா... வீட்டிலே முன்போல மகிழ்ச்சி நேராதா என்று வானத்தைப் பார்த்து நிற்க ஆரம்பித்தார் வேலவன்.

விசுவாசமுள்ள வேலைக்காரனா திருடினான்? வேறு எதையாவது எடுத்துக்கொண்டு போகக்கூடாதா? பரம்பரை பரம்பரையாக இருக்கும் பாத்திரங்களையா எடுத்துக் கொண்டு போவது? இந்த கடுமையான மனம் அவனுக்கு வரும் அளவுக்கு, என்ன நடந்திருக்கும்? இப்படி எண்ணி எண்ணிப் பார்த்தார் வேலவன்.

மீண்டும் மன அமைதி வீட்டாருக்கு வராதா! அவர்களை மீண்டும் மகிழ்ச்சியுடன் நடமாடச் செய்ய முடியாதா என்ற நினைத்தபோது ''சார்'' என்ற குரல் அவரை கிளர்ச்சியடையச் செய்தது.

நிமிர்ந்து பார்த்தார். எதிரே இரண்டு போலீஸ்காரர் கள் அவர்களுக்கு இடையிலே வேலைக்காரன் வீராசாமி. கைகளில் காணாமல்போன பாத்திரங்களுடன் குனிந்த தலை நிமிராமல் நின்று கொண்டிருந்தான்.

'உங்கள் வீட்டிலே திருடியதாக அவன் சொன்னான். அதனால்தான் இங்கே கொண்டு வந்திருக்கிறோம் உண்மைதானா' என்று காவலர் ஒருவர் கேட்டார்.

இல்லையே நான்தான் அவனுக்குக் கொடுத்து அனுப்பினேன். நீங்கள் நம்ப மாட்டீர்கள் என்று இப்படி சொல்லியிருக்கிறான் என்று வேலவன் சொன்னார். காவலர்களை ஏற்றுக் கொள்ள வைத்தார். முடிவு. வீராசாமிக்கு விடுதலை! அங்கேயே அவனை விட்டு விட்டுக் காவலர்கள் சென்று விட்டார்கள்.

தனியாக நின்றவனை சொல்தாக்குதலின் மூலமாக ஏசுவதில் ஈடுபட்டார்கள் அந்த வீட்டுப் பெண்கள். சபித்தார்கள். சாபமே கொடுத்தார்கள். ஏங்கிக்கிடந்த வர்கள் இதயம் கொந்தளிக்கும் எரிமலையாக மாறியதே தவிர குளிரும் வழியைக் காணோம்.

ஏச்சு மழை நின்றது. மரத்தில் கட்டிப் போட்டு அடித்தால்தான் தீரும், மனம் ஆறும் என்றார்கள். தங்களுக்குள்ளே பேசிக் கொண்டார்கள். வேலவன் சமாதானம் கூறிப் பார்த்தார்.

அவர்கள் முகத்திலே கோபமே கொப்புளித்தது.

வீட்டில் எவ்வளவு பணம் இருக்கிறது என்று கேட்டார். அவரது துணைவியார் 2000 ரூபாய் இருக்கிறது என்றார். எடுத்துவா என்றார். அந்த அம்மாள் மறு பேச்சு பேசாமல் எடுத்துக் கொண்டு வந்தார்.

என்ன நடக்கப் போகிறது என்று அவரது முகத்தையே மற்றவர்கள் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

''இந்தா வீராசாமி! இதை எடுத்துக் கொள். வேறு எங்கேயாவது போய் வியாபாரம் செய்து பிழைத்துக்

கொள். இந்த வீட்டில் இனிமேல் நீ வேலைசெய்ய வேண்டாம்'' என்றார்.

''ஐயா! மன்னித்து விடுங்கள், ஆஸ்பத்திரியில் உள்ள என் மகளின் நோய் வேதனையை சகிக்க முடியாமல் திருடி விட்டேன், இனி மேல் இப்படி செய்யமாட்டேன்.'' என்றான்.

''இல்லை! உன் மனம் எனக்குத் தெரியும்! நீ இருந்து மதிய உணவு விருந்து சாப்பிட்டுவிட்டுப் போ'' என்று அவனை உள்ளே போகச் சொன்னர். அவனும் உள்ளே சென்றான்.

வீட்டுப் பெண்கள் பிடிபிடியென்று பிடித்துக் கொண்டார்கள் வேலவனை. ''திருடிய பாவிக்குப் பணமும் சோறுமா!'' இப்படி பலப்பல கேள்விகள்.

இத்தனை நாளாக இந்த 2000 ரூபாயும், நானும் உங்கள் மனதிலே மகிழ்ச்சியை அளிக்க முடிய வில்லையே! அவன் வந்ததால்தானே உங்களுக்கு நிம்மதி வந்தது! அதனால்தான் அவனுக்கு 2000 ரூபாய்க்கு மேலே நம் வீட்டில் இருந்தாலும், அவ்வளவை யும் தந்து இருப்பேன். ஏனெனில் இந்த வீட்டிலே சந்தோஷம் இப்பொழுதுதானே வந்திருக்கிறது!

அவர்கள் மனம் உணரத் தொடங்கியது.

''பணம் மட்டும் வாழ்க்கை இல்லை. மனதிலே நிம்மதி, கவலை இல்லாத சந்தோசஷம். இதற்காக, எத்தனை ரூபாயை வேண்டுமானாலும், தானமாகத் தரலாம். எத்தனை தடவை வேண்டுமானாலும் அவனை மன்னிக்கலாம்'' என்றார் வேலவன். உண்மைதானே! பணமும் பதவியும், அதிகாரமும் மட்டும் நிம்மதியைத் தந்துவிடாது. பண்பும், இரக்கமும், பாசமும் தான் நிம்மதியைத் தரும்.

# 5. விதைத்தது உதைக்கிறது!

'இன்று என்ன நடக்குமோ, எப்படி முடியுமோ' என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தார் கல்யாணராமன். தினந்தினம் வீட்டில் நடக்கும் திருவிழாதான் இது, இன்று அது உச்சக் கட்டத்திற்குப் போய் விட்டது என்பதையும் உணர்ந்திருந்தார் அவர்.

கல்யாணராமனின் மகன், ஒரே மகன், அந்த நகரத்திலே புகழ் பெற்ற வக்கீல் ஆவார். அவர் பெயரைக் கேட்டவுடனேயே மற்ற வக்கீல்கள் எழுந்து நிற்கும் அளவுக்குத் தொழில் நுணுக்கமும், அறிவாழமும் நிறைந்தவர். பரசுராமன் என்ற பெயர் கொண்டவர்.

வெளியிலே தான் பேரும் புகழும் கொண்டவர் என்றாலும், வீட்டிற்குள் வந்தால் மனைவியிடம் பெட்டிப் பாம்பாய் அடங்கிப் போய்விடுவார்.

அதற்கான காரணத்தை அவரிடம் யார் போய் கேட்பது? மனைவிக்கு அடங்கிய மனிதன் என்பதற்காக அவரது வேலைக்காரர்கள் ஒளிந்திருந்து பேசிக் கொள்வார்கள். வேடிக்கையாகப் பல கதைகளையும் கூறுவார்கள்.

கோர்ட்டில் இவர் வக்கீலாக வாதாடிவிட்டு, வீட்டுக்கு வந்தால், பரசுராமனின் மனைவி பவானி, கோர்ட்டையே வீட்டுக்குக் கூட்டி வந்ததுபோல கூச்சல்போடத் தொடங்கி விடுவாள். அமைதியாகக் கேட்கும் நீதிபதி போல, தன் மனைவியின் வழக்குகளைக் கேட்பார் பரசுராமன்.

பவானியின் வழக்கெல்லாம் கல்யாணராமன் மீதுதான். தன் கணவனைப் பெற்ற பெருமகனாயிற்றே. வயதானவராயிற்றே, அரண்மனை போல வீட்டை சம்பாதித்துக் கொடுத்தவராயிற்றே; தன் ஆருயிர் கணவனை இந்த அளவுக்குப் புகழ் பெற்ற வக்கீலாக ஆக்கியிருக்கிறாரே என்றெல்லாம் பவானி பார்க்கவில்லை; பார்ப்பதில்லை, மதிப்பை ஒரு மயிரிழை கூடத் தருவதில்லை.

மாமனாரை வீட்டை விட்டு விரட்டினால்தான், தான் மனம் போல் வாழமுடியும் என்ற முரட்டுத் தனமான முடிவில் இருந்தாள் பவானி.

அதற்காகத் தினமும் மாமனாரைத் திட்டுவாள், உணவு உண்ணும் நேரத்தில் உள்ளம் வருந்தும்படி பேசுவாள், ஏசுவாள், எந்தெந்த வகையில் அவரை அவமானப்படுத்த முடியுமோ, அதையெல்லாம் ஆனந்தமாக ஆரவாரத்துடன் செய்வாள்.

மாலை நேரத்தில் தன் கணவன் வீட்டிற்கு வந்ததும் வராததுமாக, வாசலிலேயே நின்று, தன் வம்பு புராணத்தை ஆரம்பித்து, வீட்டுப் படுக்கையறை வரை சென்று வெற்றிகரமாக முடித்துக் கொள்வாள்.

கட்டிய மனைவியின் கண்ணீர் அருவியையும், கரைகாணா துன்பத்தையும் காணச்சகிக்காமல் வில்லிலிருந்து புறப்பட்ட அம்பு போல, வேகமாக தந்தையிடம் போவான் பரசுராமன்.

'உங்களால் தினமும் இதே தொல்லைதான். வயதாகி விட்டால் ஒரு மூலையில் போய் முடங்கிக் கிடக்கக் கூடாதா! ஏன் இப்படி வீட்டில் குழப்பம் விளைவிக்கிறீர்கள்? என்ற பாணியில் முன்பெல்லாம்

பேச ஆரம்பித்தவன், இப்பொழுதெல்லாம் தந்தை யென்றும் பார்ப்பதில்லை.'

தெருவில் போகும் தெரியாத 'ஒருவனை, ஒரு பிச்சைக் காரனை விரட்டுவது போல, திட்டுவது போன்ற நிலையில் திட்டவும் தொடங்கி விட்டான்.'

மருமகளுடன் மகனும் இரண்டறக் கலந்து விட்டான் அப்படி அவள் தன் மகன் மனதை மாற்றிவிட்டாள். இனிமேல் நான் எப்படி எடுத்துச் சொன்னாலும் அவன் காதில் ஏறாது, என்று தீர்மானித்துக் கொண்ட கல்யாணராமனும் தன் தலைவிதியை நினைத்துக் கொண்டு தன் அறைக்குப் போவதும் அழுவதும் வழக்கமான காரியமாகி விட்டது.

அன்று வேலைக்காரன் ஒருவன் வேலைக்கு வரவில்லை அவனது வேலையைச் செய்யச் சொல்லி தன் மாமனாரை ஏவினாள் பவானி. ஆனால் அவரது தன்மானம், சுய கௌரவம் அதற்கு இடந்தரவில்லை. மறுத்துப் பேசி விட்டார்.

பவானிக்கும் இவருக்கும் கொஞ்சம் வாய்ச்சண்டை. வழக்கத்திற்கு மாறாக, முற்றிவிட்டது. இதனால் இரண்டில் ஒன்று பார்ப்பதாகவும், இது தன் மானப் பிரச்சினை என்பதாகவும் பவானி கூறி விட்டாள். அதற்கான முயற்சியிலும் தீவிரமாக ஈடுபட்டாள்.

அன்று மாலை பரசுராமன் கோர்ட்டிலிருந்து வீடு திரும்பினான். வீட்டின் ஒரு மூலையில் இருந்து கொண்டு இன்று என்ன நடக்கப் போகிறதோ, என்று அச்சத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார் கல்யாணராமன்.

வீட்டு வாசலிலே நின்று கொண்டிருந்த பவானி, தன் கணவனைப் பார்த்ததும் புலம்பத் தொடங்கி விட்டாள். தன்மானமே பறிபோய்விட்டது என்றாள்.

தன்னைத் தன் பெற்றோர் வீட்டுக்கு அனுப்பிவிடச் சொன்னாள். வீட்டில் ஏற்கனவே தயாராகக் கட்டி வைத்திருந்த ஒரு பெட்டியை எடுத்துக் கொண்டு புறப்பட ஆயத்தமானாள்.

மனைவியைத் தடுத்தார் பரசுராமன். நீ ஏன் போக வேண்டும்? அந்தக் கிழக்கோட்டானை விரட்டுகிறேன் பார்! அது இங்கே இருந்து கொண்டு உயிரை வாங்குகிறது. செத்துத் தொலையவும் மாட்டேன் என்கிறது என்று கூறினான். அல்ல சீறினான். விடுவிடென்று வேகமாக உள்ளே நுழைந்தான்.

பெற்ற தந்தையின் கையைப் பிடித்து இழுத்தான். பிறகு முன்னே இழுத்துத் தள்ளி, அவர் கழுத்தில் கையை வைத்துத் தடதடவென்று தள்ளிக் கொண்டே வாசலை நோக்கிப் போனான். முடியாது என்பது போல கல்யாணராமன் பின் வாங்கினார். இளமையின் முன்னே முதுமை தள்ளாடியது. தள்ளாடித் தள்ளாடி வாசல்வரை நடந்து பேசாமல் நடந்தார் கல்யாணராமன். அவரால் மகனின் வேகத்திற்கு நடக்க முடியவில்லை. வாசல் வரை வந்தாகி விட்டது.

இப்போது கல்யாணராமன் முரண்டுபிடிக்கத் தொடங்கினார். குறிப்பிட்ட ஒரு இடம் வந்ததும் அவர் நின்றார். மகனைப் பார்த்துப் பேசத்தொடங்கினார்.

'கழுத்திலிருந்து கையை எடுத்து விடப்பா அருமை மகனே! இனிமேல் நானே வெளியே போய் விடுகிறேன். இங்கே இனிமேல் நான் தங்கவே மாட்டேன். உன் முகத்தை பார்க்கவே மாட்டேன்' என்று அழுது கொண்டே கூறினார். பரசுராமனுக்கோ ஆச்சரியம். தன் அப்பா அழுவதை இன்றுதான் பார்க்கிறான் அவன். மகனின் அதிர்ச்சியைக் கண்ட கல்யாணராமன் தொடர்ந்து அழுது கொண்டே பேசினார்.

'என் மனைவியின் பேச்சைக் கேட்டுக் கொண்டு அன்று தந்தையின் கழுத்தைப் பிடித்து, இந்த இடம் வரை தள்ளிக் கொண்டு வந்த பாவி நான். அந்தப் பாவத்திற்குப் பரிகாரமாக நீ செய்து விட்டாய். என் தந்தை இந்த இடம் வந்ததும் நான் தள்ளவில்லை. எனக்கு சிரமம் கொடுக்காமல் இந்த இடம் வந்ததும் அவராகவே வீட்டைவிட்டுப் போய்விட்டார். நானும் அதுபோலவே போய் விடுகிறேன் என்னைத் தள்ளி சிரமப்படவேண்டாம். வரட்டுமா மகனே என்றார். சிலையாக நின்றனர் பரசுராமனும் பவானியும்.

கல்யாணராமன் தன் தந்தையான ஆனந்தராமனை வாசல்வரை கழுத்தைப் பிடித்து அன்று தள்ளினார். முற்பகல் செய்ததே பிற்பகலில் அவருக்கு விளைந்தது. பரசுராமனுக்கு எந்த ராமன் வரப்போகிறானோ?'

இதுதான் வாழ்க்கை. இதுதான் வாழ்க்கை என்று வெளியேறிய கல்யாணராமனின் மனசாட்சி துடித்து கொண்டிருந்தது. விளையாட்டிலும் இப்படித்தான்.

பிறரது முன்னேற்றத்தை இன்று பதவியில் இருந்து கொண்டு தடுப்பவர்கள், நாளைக்கு அவருக்கு முன்னேற்றம் என்று வரும்போது. ஒருவர் வந்து தடுக்காமலா இருப்பார்?

உதவி எப்படி பிறரால் எதிர்பார்க்காமல் வந்து சேருமோ, அது போலவே துரோகத்திற்குப் பதிலாக துரோகமும் வந்து ஒருநாள் சேரும்!

பிறரைக் கெடுத்தவர்கள் கெட்ட கதைகள் ஏராளம் இருக்கின்றன. அவற்றை மறப்போம். நல்லது செய்து நாம் மகிழலாமே!

# 6. காரணமும் காரியமும்

சுற்றுலா செல்கின்ற கும்பல் ஒன்று, சுவையான தின்பண்டங்களையும் சுமந்து செல்கின்றது. எங்கேயாவது ஓரிடத்தில் ஓய்வாக அமர்ந்து உண்டு, உல்லாசமாகப் பொழுதைக் கழிக்க வேண்டும் என்று விரும்பியவாறு, அது ஓரிடத்தைத் தேர்ந்தெடுக்கின்றது.

நெடு நெடுவென்று வளர்ந்த ஒரு மரம். நிழல் குடை போல் தலை விரித்து கிளையசைத்து நிற்கின்ற மரம். அவர்களை ஆவலுடன் நிழல் பாய் விரித்து அழைத்தது.

எல்லோரும் சென்று அமர்ந்தனர். அருந்தினர். அறுசுவை உண்டியை ஆரவாரத்துடன் அங்கே உண்டு மகிழ்ந்தனர்.

வயிறு நிறைந்ததும் 'வாய்கள்' நிமிர்ந்து கொண்டன' கொட்டாவி விட்டு கால்களை நீட்டி முடக்கிக்கொண்ட உருவங்கள் சில. நெட்ட நெடிய மரத்தைப் பார்த்ததும் ஏதாவது பேச வேண்டுமே என்று யோசித்து, ஒன்றும், வராமல் ஒதுங்கிக் கொண்ட மனிதர்கள் மேலும் சிலர்.

மற்றவர்கள் தங்கள் விமரிசனத்தைத் தொடங்கினர். அழகான மரம். இந்த இடத்திற்கு எழிலைத் தருகின்ற மரம்' என்று இயற்கையழகைப் போற்றி மகிழ்ந்தார் ஒரு முதியவர்.

நீண்ட கிளைகள் உள்ளன. இவற்றைப் பலகையாக அறுத்தால் வீடு கட்ட உதவும், மரச் சாமான்கள் செய்யப் பயன்படும் என்று காரியவாதி ஒருவர், அதனைக் கணக்கெடுத்துப் பேசினார்.

இன்னும் கொஞ்சம் நாள் போனால், நல்ல கனிகளைக் கொடுக்கும். பறவைகளுக்கு மட்டுமல்ல, பசித்து வரும் மக்களுக்கும் நன்கு பயனைக் கொடுக்கும் என்று பயன் தெரிந்த புத்திசாளி ஒருவர் பேசினார்.

என்ன இருந்தாலும் இதனை வெட்டி வீழ்த்தினால், இரண்டு டன் விறகு கிடைக்கும். நிம்மதியாக இரண்டு மாதங்களாவது அடுப்பெரிக்கலாம் என்றார் கட்டைத் தொட்டி வியாபாரி ஒருவர்.

இன்னும் ஒருவர், காரண காரியமில்லாமலேயே, 'இந்த மரம் இந்த இடத்திற்கு இடைஞ்சலாக இருக்கிறது. இதனால் ஆபத்துதான்' என்றுஅர்த்தம் கெட்ட முறையில் அடுக்கிக் கொண்டே போனார்.

ஆக, இருந்தது ஒரு மரம். அண்ட இடங்கொடுத்து இருக்க நிழல் கொடுத்து உதவிய அந்த பழமரத்தைத்தான். பலர் சேர்ந்து கொண்டு தங்கள் தங்கள் அபிப்பிராயங்களை அள்ளி இறைத்துக் கொண்டிருந்தார்கள்.

அந்தப் பழமரத்தின் நிலையில்தான் உடற் கல்வியும் விளையாட்டும் நம் நாட்டில் இருக்கின்றன. பயன் தெரிந்தவர்கள் அதை பாராட்டுகிறார்கள். அதன் பெருமையைப் பறைசாற்றுகிறார்கள். பின்பற்றுமாறு கேட்டுக் கொள்கிறார்கள். பேணிக்காக்க பலவாற்றானும் பேருதவியும் புரிகின்றார்கள்.

வேறு சிலரோ யானை பார்த்த குருடர்களைப் போல, விளையாட்டின் பெருமையை உணராது. வாழ்க்கையை யும் வீணாக்கிக் கொள்கின்றார்கள்.

பலராக சுற்றுலா வந்த கும்பல் போலத்தான். இவ்வுலக வாழ்க்கையும் மக்களும் இருக்கின்றார்கள். இனிய கனிகளையும், குளிர்ந்த நிழலையும் கொடுக்கும் மரம்போல, விளையாட்டும், உடற் கல்வியும் விளங்குகின்றன.

விளையாட்டை வெறுக்கக் கற்றுக் கொண்டவர்கள் அறியாமையால் செய்கின்றார்கள். அதை வீழ்த்த முயல்பவர்கள் தான் இந்த சமுதாயத்தின் விரோதிகள் ஆவார்கள். தினைத்துணை பயன் தந்தாலும் பனைத் துணையாகவே கருதிப் போற்றுகின்ற பண்பு உள்ளம், என்றைக்கு நம்மவர்க்கு வருகின்றதோ, அன்று தான் சமுதாயம் சக்தியுள்ளதாக விளங்கும்! தமிழகத்தின் புகழ் தரணியெல்லாம் நிலைக்கும்!

# 7. அவசரமும் அவசியமும்

தொழில்துறை அதிபர்களில் அவர் தலையானவர். அவர் விரலசைந்தால்கூட, அது வியாபார விஷயமாகத் தான் இருக்கும், சிரிக்கும் என்று வியாபாரிகளாலே போற்றப்படுபவர்.

எந்த நேரமும் 'பிசியாக இருப்பவர். பார்ப்பதற்குகூட பத்து நாளைக்கு முன்னதாகவே நேரம் கேட்டுப் பெற வேண்டுமென்ற நிலையிலே வாழ்பவர்.'

வைத்தியநாதன் என்ற பெயர் கொண்ட முதலாளி, பல தொழிற்சாலைகளின் உரிமையாளர். அவர் பெயரில் பல்வேறு நகரங்களுக்கு 'பஸ்கள்' ஓடிக்கொண்டிருக் கின்றன காலையில் தொடங்கி இரவு வரையிலும் எதையாவது சிந்தனை செய்து கொண்டு, செயலாற்றிக் கொண்டு வாழ்பவர்.

உடல் அவருக்கு உழைப்பதற்கு உறுதுணையாக இருந்தது. உற்ற சேவகன் போல, அல்லும் பகலும் அலுப்பில்லாமல் உழைத்து வந்தது. அது ஒத்துழைத்துக் கொண்டே வந்ததால், உடலைப் பற்றிய சிந்தனையே அவருக்கு வரவில்லை. வரவேயில்லை.

விருப்பம் போல வாழ்ந்தார். விரும்பியதை உண்டார். வேண்டிய காரியங்களை விழித்து இருந்தும் கூட தொடர்ந்தார், மெய்வருத்தம் பாராமல் களைத்திருந் தாலும், கண்துஞ்சாமல், பசியும் நோக்காமல் கருமமே கண்ணாகக் காரிய மாற்றினார்.

எத்தனை காலம்தான் இப்படி வாழ முடியும்? ஒரு மாதம் கார் ஓடினால், அதைப் பார்க்க, பராமரிக்க, பாதுகாப்பு கொடுக்க எவ்வளவு நினைவுடன் ஆட்களை

ஏவுகிறார் அந்த வைத்தியநாதன்! தொழிற்சாலையிலுள்ள எந்திரங்களை அக்கறையுடன் பார்த்து அவைகளுக்கு ஓய்வு தரவேண்டும். எண்ணெய் இடவேண்டும் என்றெல்லாம் ஆணை இடுகின்றாரே!

ஆனால், அவரது உடலை அவர் அலட்சியம் செய்து கொண்டேயிருந்தார் அவரையும் அறியாமல்.

ஒரு சில சமயத்தில், அவருக்கு தலைசுற்றல் வரும். தள்ளாட்டம் வரும், 'பலஹீனம்தான்' மருந்து சாப்பிட்டால் சரியாகிவிடும்' என்று அந்த நேரத்தை அப்படியே சமாளித்துக் கொள்வார்.

இருந்தாலும், உடல் அவருக்கு இணங்கிப் போகவில்லை. அடிக்கடி டாக்டரைப் போய்ப் பார்க்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. டாக்டர் அவரை நன்கு பரிசோதித்துப் பார்த்தார். பல கேள்விகள் கேட்டார். பிறகு, அவரது கருத்தைக் கூறினார்.

'நீங்கள் ஒருமாதம் வீட்டிலே இருந்து நல்ல ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் நீங்கள் எதிர்பார்க்கிற நிலைமை வரும்' என்று டாக்டர் பேசியவுடனே, வைத்தியநாதன் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

'என்ன டாக்டர் இப்படிக் கூறுகின்றீர்கள்? நான் ஒரு மாதம் ஓய்வு எடுத்துக் கொள்வதா? நான் ஓய்வு எடுத்துக் கொண்டால், தொழிற்சாலைகளுக்குப் போகா விட்டால் தொழிற்சாலைகள் என்னாவது? தொழிலாளர் பிரச்சினைகள் தலைதூக்கி விடுமே! உற்பத்தி குறைந்து போகுமே! பிறகு அவற்றை எவ்வாறு ஈடுகட்ட முடியும்?' படபடவென்று பொரிந்து தள்ளினார் வைத்தியநாதன்.

டாக்டர் அமைதியாகச் சிரித்துக் கொண்டார்.

மருந்து மட்டுமே உங்கள் உடலை குணப்படுத்திவிட முடியாது. உங்கள் உடலுக்கு, ஓயா உழைப்பிலிருந்து ஓய்வு கொஞ்சம் தேவை! உங்கள் வயதையும், மன உழைப்பையும் நீங்கள் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டாமா?

'என்னால் ஓய்வு எடுக்க முடியாது' என்று திட்டவட்டமாகப் பேசிவிட்டார் வைத்தியநாதன். வேறு ஏதாவதுயோசனை கூறவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். டாக்டரும் சரி என்று சிரித்துக்கொண்டே, அவர் முகத்தைப் பார்த்தார். அதிலே ஆயிரம் அர்த்தங்கள் இருந்தன.

மருந்தும் உணவும் மட்டும் உடலைப் பாதுகாத்து விடாது. ஓய்வும் உடற் பயிற்சியும்தான் உடலைப் பண்படுத்தும். பாதுகாக்கும். நீங்கள் காலையிலும் மாலையிலும் உடற் பயிற்சி செய்தால் நல்லது என்றார்.

உடற் பயிற்சியா! இந்த வயதிலா? என்னைப் போன்றவர்கள் உடலை வளைத்து, நிமிர்த்தி, குனிந்து பணிந்து செய்ய முடியுமா? அதற்கு நேரம்தான் உண்டா? என்று ஏளனமாகச் சிரித்துவிட்டு, உடற் பயிற்சிக்கு மாற்று ஏதாவது உண்டா? என்றும் கேட்டார்.

வைத்தியநாதன் வழிக்கு வரமாட்டார் என்று புரிந்து கொண்டார். குடும்ப டாக்டர் அல்லவா? அவரது குணாதிசயங்கள் புரியாமலா போகும்?

உடலுக்குப் பயிற்சி என்றால் உறுப்புக்களுக்கு 'மசாஜ் பண்ணி விடுவதுதான். வேறு ஒன்றும் இல்லை. ஆனால், அதிலே உங்களுக்கு விருப்பமில்லை என்றால், மெதுவாக ஓடுங்கள். முடிந்தவரை, முடிந்த தூரம் ஓடுங்கள். காலையில் மட்டும் போதும். அல்லது

வேகமாக நடந்து செல்லுங்கள். உடல் வியர்க்க வேண்டும். ஏதாவது ஒன்றை நீங்கள் செய்துதான் ஆக வேண்டும் என்றார் டாக்டர்.'

'அதுபோதும். நடக்கிறேன். வேகமாக நடக்கிறேன், வியர்வை வரவேண்டும். அவ்வளவுதானே!' இடைமறித் தார் வைத்தியநாதன். நாளை காலையிலிருந்து ஆரம்பித்து விடுகிறேன், எனது வீட்டைச் சுற்றி நடக்கிறேன். போதுமா?

ம்ஹூம்! வீட்டைச் சுற்றி நடக்கும்போது திரும்பத் திரும்ப உங்கள் தொழில்துறை நினைவுகள்தான் தொடர்ந்து வந்து கொண்டேயிருக்கும். அதனால் வேறு இடம் போங்கள்.

கடற்கரையில் நடக்கலாம் அல்லவா! வைத்திய நாதன் யோசனை கேட்டார்.

உங்களுக்குத் தெரிந்த நண்பர்கள் அங்கே வருவார்கள். அவர்களிடம் பேசினால் மீண்டும் மீண்டும் அதே பேச்சுக்கள், நினைவுகள்தானே வரும்.

பூங்கா, மைதானங்கள் எனது பல இடங்களையும் சொல்லிப் பார்த்தார் வைத்தியநாதன். டாக்டரோ எல்லாவற்றிற்கும் ஒரு மறுப்பு கூறிக்கொண்டே வந்தார்.

நீங்களே ஒரு இடம் சொல்லுங்கள் என்றார் சலிப்புடன். டாக்டரும் கனைத்துக் கொண்டே கூறினார்.

உங்கள் வீட்டிலிருந்து ஒரு பர்லாங் தூரத்திலுள்ள கல்லறைத் தோட்டம் ஒன்று இருக்கிறதல்லவா? அந்த இரண்டு அல்லது மூன்று முறை சுற்றி வாருங்கள். உங்கள் உடலும் மனமும் நிச்சயம் தேறிவிடும் என்றார் டாக்டர்.

எவ்வளவோ அழகான இடங்கள். அருமையான பகுதிகளிருக்கும்போது, போயும் போயும் அந்த கல்லறைத் தோட்டத்தைச் சுற்றி நடக்கச் சொல்லுகிறீர் களே டாக்டர். வேடிக்கையாக இருக்கிறதே!

ஆமாம்! நீங்கள்தானே ஓய்வே இல்லை யென்கிறீர்கள். தொழிற்சாலைகள் நான் இல்லாவிட்டால் ஓடாது. முன்னேறாது. என்னால் ஓய்வே எடுக்க முடியாது என்று உங்களைப் பற்றிய நினைவில்லாமல் வருமானம், வியாபாரம் என்றே பேசுகின்றீர்கள்.

'நான் இல்லாவிட்டால் எதுவுமே நடக்காதென்று உங்களைப் போல சொன்னவர்கள் எல்லோருமே அங்கேதான் உறங்கிக் கொண்டிருக்கின்றார்கள். அவர்கள் அப்படி நினைத்ததாலேதான் சீக்கிரம் போய்விட்டார்கள். அவர்களை தினந்தினம் சுற்றிவந்தால் தான் உங்களுக்கும் நல்லதென்று நினைக்கிறேன் என்றார் டாக்டர்.'

போகப்போகின்ற வாழ்க்கையை, சதம் என்று எண்ணி, உடலைக் கவனிக்காது, மருந்தும் ஊசியும் துணையாக வைத்து வாழ்ந்துவிடலாம் என்று நினைத்த வைத்திய நாதனுக்கு அப்பொழுதான் சுரீர் என்று உறைத்தது.

உடற்பயிற்சியை தினமும் செய்கிறேனே! என்றார் வைத்திய நாதன்.

உண்மையை புரிந்து கொண்டார் என்று மகிழ்ந்தார் டாக்டர். அந்த மேன்மையை உலகமும் புரிந்து கொண்டால்...

அந்தக் காலம் ஒருநாள் வராமலா போகும்!

# 8. திமிரும் புதிரும்

அப்படி ஒரு பேய் மழை பெய்யும் என்று யாரும் எதிர்பார்க்கவே இல்லை. திடீரென்று இருள் சூழ்ந்தது போல, கருமேகங்கள் வானை கவ்விக் கொண்டன. குளிர்ந்த காற்று வீசத் தொடங்கியது. பிறகு, இடிஇடித்து பெய்யத்தொடங்கிய மழை, சாலைகளை கடல் போலாக்கி விட்டு ஓய்ந்து விட்டது.

'காய்ந்தும் கெடுக்கும், பேய்ந்தும் கெடுக்கும்' என்று மழையை சாடி சபித்து முனகிக் கொண்டு போன மக்கள் ஏராளம். வென்னீரில் முதன்முதலில் குளித்த ஏழையின் முகத்தைப் போல, பன்னீரில் குளித்தது போல மலர்கள் மழை நீரில் சிலிர்த்தவாறு அசைந்து கொண்டிருந்தன.

மரங்களோ இலைகளையும் கிளைகளையும் அசைத்து, நீரைத் தூவிக் கொண்டிருந்தன. சாலை யோரத்து மரங்களைப் போல்தான் தோட்டத்துச் செடிகளும். காற்றாடிக் கொண்டிருந்தன.

தோட்டங்களிலே மிகவும் பிரபலமான தோட்டம் அது. **பிரேம்பூங்கா** என்று அழைத்து அதனைப் பெருமைப் படுத்தினர். அருமையான புல்தரைகள். அழகழகான செடிகள். வண்ண வண்ண மலர்கள், அவற்றைத் தாங்கும் மண்சட்டிகள், சட்டிகள் நிரம்பத் தண்ணீர் நின்று கொண்டு தளும்பிக் கொண்டிருந்தது.

மண்சட்டிகளில் மட்டுமல்ல தண்ணீர், ஆங்காங்கே இருந்த மேடையின் குழிகளிலும் தண்ணீர். கீழே உடைந்து கிடந்த கண்ணாடித் தம்ளரிலும் தண்ணீர்.

இதையெல்லாம் பார்த்தது ஒரு பீங்கான் பாத்திரம். தனக்கு வந்த ஆத்திரத்தை அடக்க முடியாமல், அனல் கக்க எல்லாவற்றையும் வெறித்து பார்த்துக் கொண்டிருந்தது.

யாரிடம் சொன்னால் தன் குறை தீரும் என்று திரும்பித் திரும்பிப் பார்த்தது. தன் அருகே நகரும் அட்டையிடம் சொல்லலாமா? தாவிப்போகும் தவளையிடம் சொல்லலாமா? தாராளமாய் பாடித்திரியும் வண்டிடம் சொல்லலாமா? அலைபாய்ந்து கிடந்த்து அது.

அதன் வேதனையைப் பார்த்த தாமரை இலை ஒன்று, தான் இருப்பதை அசைத்துக் காட்டி, பீங்கான் பாத்திரத்திற்கு உணர்த்தியது. தன்னையே பார்த்துக் கொண்டிருந்த தாமரை இலையைப் பார்த்து, தன் குறையை சொல்லத் தொடங்கியது அந்த பீங்கான்.

''பாருங்கள் இந்த மழைக்கு இருக்கும் திமிரை! மண் சட்டிக்குள் போய் வீழ்ந்து கிடக்கிறது. உடைந்த கண்ணாடித் தம்ளருக்குள் உருண்டோடுகிறது, நான் என்ன' அதுகளுக்குக் குறைந்தா போய்விட்டேன் என்னிடம் மட்டும் வந்து தங்கமாட்டேன் என்கிறது?'' என்றது.

''ஏன்! உன்மேல் மழைக்கு என்ன கோபம்? என்மேல் விழுந்தால் முத்தாக உருண்டு போகிறது. எனக்கும் கூட வருத்தம்தான். என்மேனி முழுவதும் தண்ணீராக நிற்க வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். ஆனால், ஒரு சிறு குண்டுபோல நின்று என்னை

அவமானப்படுத்துகிறது இந்த மழை.'' என்று தாமரை இலை புலம்பத் தொடங்கியது.

''மழைக்கு அறிவே இல்லை. அதை அனுப்பும் கடவுளிடம் கூறி தண்டனை வாங்கித் தந்தால் தான் அதற்கு புத்தி வரும்'' என்று பீங்கான் பாத்திரம் தன் குறைக்குத் தீர்வுகாண முற்பட்டது.

மண் சட்டிக்கோ சிரிப்பாக இருந்தது. சிரிப்பை அடக்க முடியாமல் சத்தம் போட்டு சிரிக்கவே, பீங்கானும் தாமரை இலையும் திரும்பிப் பார்த்தன. ''ஏன் சிரிக்கிறாய்? இனிமேல் சிரித்தால் உன்னை போட்டு உடைத்து விடுவேன்'' என்று பீங்கான் பீறிட்டுப் பாய்ந்தது.

''ஒன்றும் இல்லை, ஒரு சந்தேகம். அதை கேட்கலாமா?'' என்றது மண் சட்டி.

''உன் மண் மண்டையில் ஏறாது. இருந்தாலும், கேட்டதற்காக பதில் சொல்கிறேன்'' என்றது பீங்கான்.

''எல்லா இடத்திலும் வந்து தண்ணீர் தங்குகிறது தேங்குகிறது. என்னிடத்தில் மட்டும் ஏன் வரமாட்டேன் என்கிறது? அதனால்தான் அந்த உருப்படாத மழையைத் திட்டினேன்'' என்று கூறியது பீங்கான்.

மண் சட்டியோ தன் தலையில் அடித்துக் கொண்டது.

''நான் வாய் திறந்து நிற்கிறேன். அதனால் எனக்குள் மழைத் தண்ணீர் தேங்குகிறது. நீயோ கவிழ்ந்து கிடக்கிறாய். உன்மேல் பட்ட நீர் தெறித்து ஓடி விடுகிறது. கவிழ்ந்த பாத்திரத்தில் எப்படி தண்ணீர் நிறையும்?

ஏந்தி வாங்கிக் கொள்ளத் தெரியாத நீ வாயடிப்பது எப்படி நியாயம்?'' என்றது மண்சட்டி.

கவிழ்ந்து கிடந்த பீங்கான் பாத்திரத்துக்கு அப்பொழுதுதான் ஞானோதயம் வந்தது போல நிமிர்ந்து கொண்டது. தன் தவறை உணர்ந்து நன்றி கூறியது.

இப்படித்தான் மக்களும் உடற்கல்வியைப் பழிக்கிறார்கள். உடற்கல்வியின் கொள்கையை கேட்டுக் கொள்ள மறுத்துவிட்டு, கேளாக் காதினர்களாக இருந்து விட்டு, உடற்கல்வியால் உதவி எதுவும் இல்லை என்கிறார்கள்.

உடற்கல்வியை ஏந்திக் கொள்ள முன் வந்தவர்கள் உலகத்தில் உயர்ந்தார்கள்.

ஏற்றுக்கொள்ள மறந்தவர்கள் எதை எதையோ பேசிவிட்டுப் போய் விட்டார்கள்.

கவிழ்ந்த பாத்திரம் நிமிர்ந்து உணர்ந்து திரும்பியது போல, ஒரு நாள் நிலைமை மாறலாம். வான் மழை போல உடற்கல்வி உலகுக்கு உதவலாம். என்ற நம்பிக்கையில் நமது பணி தொடர்கிறது. தொடரட்டும்.

# 9. சக்தியும் சகதியும்

அலங்காரம் நிறைந்த அரண்மனை போன்ற அந்த வீட்டில், அந்தகாரம் சூழ்ந்தது போன்ற ஓர் அவல சூழ்நிலை. தேனீக்கள் போல சுறுசுறுப்பாகத் திரிகின்ற வேலைக்காரர்கள் எல்லோரும், சோகம் தாக்கிய முகத்துடன் செயலற்று நின்றனர்.

எந்த நேரத்திலும் எதுவும் நிகழலாம் என்று எண்ணுகின்ற பொழுதே, அவர்களது இதயங்கள் அலறிப் புடைத்துக் கொண்டு அதிகமாகத் துடிக்கலாயின. வேலைக்காரர்களுக்கே இந்த நிலை என்றால், வேண்டியவர்களுக்கு எப்படி இருக்கும்!

அந்த வீட்டின் உரிமையாளர், அதாவது அந்த வீட்டு எஜமான் சுப்ரமணியம், 'எல்லோருக்கும் நல்லவர்' என்ற பெயரை எடுத்தவர். அந்த ஊரிலே பெரிய பணக்காரர் என்ற பட்டம் பெற்றவர். அப்படிப்பட்டவர் மரணப் படுக்கையில் கிடக்கிறார் என்பதால் தான், அந்த வீடு அப்படி வெறிச்சோடிக் கிடக்கிறது.

மரணத்துடன் போராடிக் கொண்டு இருக்கும் தந்தையின் அருகில் அவரது ஒரே மகன் வந்து நிற்கிறான். தந்தை தன்னிடம் பேசவேண்டும் என்று விரும்பினார் என்றதும், அவனும் ஓடிவந்து, கைகளை கட்டியவாறு கட்டிலின் அருகே அவரது முகத்தை, வைத்த விழிகள் பின்வாங்காமல் பார்த்துக்கொண்டு நிற்கிறான்.

சுப்ரமணியம் சோகமாய் நிற்கும் தன் அன்புச் செல்வத்தைப் பார்த்தார். இறுதிப் பயணத்தின் எல்லைக் கோட்டில். தான் நிற்பதை பற்றிக் கூறினார். இவ்

அடுத்து என்னென்ன செய்யவேண்டும் என்பதையும் விளக்கமாக எடுத்துரைத்தார்.

தன் அறையில் இருந்த அலமாரிகள் நான்கினையும் ஒவ்வொன்றாகத் திறக்குமாறு கேட்டுக் கொண்டார். அத்தனை அலமாரிகளிலும் கரன்சி நோட்டுக்கள்தான். தங்க நகைகள். வைர நகைகள்.

''இவ்வளவு சொத்துக்கும் நீதான் சொந்தக்காரன். எனக்குப் பிறகு நீதான் அனுபவிக்க இருக்கின்றாய். இருந்தாலும், இரண்டு மாதம் கழித்து, உன் விருப்பம் போல் செய்யலாம், நடந்து கொள்ளலாம்'' என்றார்.

''அப்படியே செய்கிறேன் அப்பா'' என்று தலையசைத்துக் காட்டினான்.

'இவ்வளவு பணத்தையும் சந்தோஷமாக செலவு செய்யலாம். விரும்பிய பொருட்களை விரும்பிய நேரத்தில் பெறலாம். வேண்டிய இடங்களுக்குப் போய் வரலாம். நினைத்ததை நடத்திக் கொள்ளலாம். கட்டுப்பாடு இல்லாமல் கத்தை கத்தையாக நோட்டுக்களை எடுத்துக் கொள்ளலாம்' என்று தந்தை கூறியதும், மகனின் மனதிலே மகிழ்ச்சிக் கூத்தாடியது.

இத்தனை ஆண்டுகளாக, தந்தை கொடுக்கும் சில்லறைப் பணத்தில் தானே காலம் சென்று கொண்டிருந்தது. இனி தானே பணத்தை எடுத்து தண்ணீராய் செலவு செய்யலாம் என்று எண்ணினான்.

அதற்குள் தந்தை பேசலானார். 'என் செல்வமே! ஒரே ஒரு வேண்டுகோள். நிபந்தனையும் அதுதான். உன்

செலவுக்கு எவ்வளவு ரூபாய் வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாம். ஆனால் பணத்தை எடுப்பதற்குமுன், நீயே சம்பாதித்த ஒரு பத்து ரூபாயை அலமாரியில் போட்டுவிட்டு, பிறகு பணத்தை எடுத்துக் கொள்' என்றார்.

'இதுதானா நிபந்தனை. நிச்சயம் என்னால் முடியும். அப்படியே செய்கிறேன் அப்பா' என்று வாக்குறுதியளித் தான்.

தந்தை இறந்த பிறகு, அவர்க்குரிய கடன்களையும் முடித்தாயிற்று, நாட்கள் பல கழிந்தன. இளைஞனாகிய செல்வனின் எண்ணம், பணம் பற்றியே எண்ணலாயிற்று. இனி தடையில்லை அல்லவா!

அலமாரியைத் திறந்துபார்த்தான். அப்பப்பா! எவ்வளவு நோட்டுக்கள்! எப்படி குவிந்து கிடக்கின்றன! 'இனி இந்த நோட்டுக்கள் நம்முடைய சந்தோஷத்தின் தூதுவர்களாக மாறப் போகின்றன' என்று எண்ணியதும், அவனது மனம் சலனத்திற்கும் சபலத்திற்கும் அடிமை பட்டுப் போய் விட்டது.

'ஒரு நாளைக்கு ஒரு பத்து ரூபாய் சம்பாதித்துக் கொண்டு வருவது முடியாதா? அதற்குப் பிறகு பணத்தை எடுத்துக் கொண்டு வெளியே போகப் போகிறேன்' என்று பேசி முடிவு செய்து கொண்டான்.

கத்தை கத்தையாகக் காட்சியளித்த நோட்டுக்கள். அவனது ஆசைக் கனவுகளை உசுப்பி விட்டுக் கொண்டு இருந்தன. ஆசை மிகுதியால் இவனும் பணம் சம்பாதிக்கப் புறப்பட்டு விட்டான்.

ஒவ்வொரு நாளும் ஊரில் ஒவ்வொரு பக்கமாகச் சென்றான். என்ன வேலை செய்யவேண்டும் என்பதே அவனுக்குத் தெரியவில்லை. யாரிடம் போய் வேலை கேட்க வேண்டும் என்பதும் புரியவில்லை.

வசதி நிறைந்த குடும்பத்தில் பிறந்தவன் அல்லவா! உழைக்காமலே உண்டு உறங்கி, காலம் போக்கியவன் அல்லவா! அதனால்தான் ஒன்றும் புரியவில்லை.

எதையாவது செய்து எப்படியாவது பத்து ரூபாய் சம்பாதித்து விட்டால், ஒரே சமயத்தில் வேண்டிய பணத்தை எடுத்துக் கொண்டு போய் விடலாம் என்று முடிவுக்கு வந்துவிட்டான்.

வியாபார நுணுக்கம் தெரிய வேண்டுமே, என்ன வேலை செய்தால் இத்தனை ரூபாய் கிடைக்கும் என்பதாவது தெரிய வேண்டாமா? அவன் கால் கடுக்கக் காத்திருந்து, கால் வலிக்க அலைந்து திரிந்ததுதான் மீதியாயிற்று. சொகுசாக இருந்து சம்பாதிக்கும் வழிவகைகள் எதுவும் தெரியவில்லை.

ஒரு நாள் கூலியாகப் பெட்டி சுமந்து பார்த்தான். மற்றொரு நாள் மண் வண்டியில் மண் கூடை தூக்கிப் பார்த்தான். இன்னொரு நாள். வேகாத வெயிலில் நின்று விற்பனைக்கு உதவியாளராக நின்று பார்த்தான்.

இப்படியாக அந்த நான்கு நாட்களிலும் நாளைக்கு ஒரு ரூபாய்தான் சம்பாதிக்க முடிந்தது. இப்படியாக பல நாட்கள் ஆயின.

அதற்குள் அவனது மேனி கருத்தது. முக அழகு மாறுபட்டுப் போனது. மேலெல்லாம் பயங்கர வலி,

உடம்பெல்லாம் எரிச்சல். மனதிலே கவலை. மாறாத வருத்தம்.

இப்படியாக சம்பாதித்த பத்து ரூபாயை எடுத்துக் கொண்டு, அலமாறியின் முன்னே போய் நின்றான். அவசர அவசரமாக அலமாரியைத் திறந்தான். கதவு திறந்ததும் அவனது மலர்ந்த முகத்திலே பணக்காற்று எதிர்த்து வந்து மோதியது. கண்கள் அகலமாக விரிந்து கொண்டன.

இனி, இந்த பத்து ரூபாயைப் போட வேண்டியது தான். பணத்தை அள்ளிக் கொள்ள வேண்டியதுதான், மனம் துள்ளிற்று.

பத்து ரூபாயை அலமாரியில் போட்டான். அந்தக் கத்தை நோட்டுக்களை எடுக்கப் போகும் பொழுது அவனது கை கூசியது. ஒரு வித நடுக்கம். ஒரு வகைக் கூச்சம். மனம் தடுமாறியது.

இஷ்டம் போல் செலவு செய்ய எவ்வளவு பணம் வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாம் என்று அப்பாதான் அனுமதி கொடுத்து விட்டுப் போய் விட்டாரே! பிறகென்ன தயக்கம்? பேய் மனம் பேசியது.

'ஒரு பத்து ரூபாய் சம்பாதிப்பதற்குள் இத்தனை துயரங்களையும் துன்பங்களையும் அடைந்தேனே! பத்து நாள். பேயாய் திரிந்து. மாடாய் உழைத்து, பத்து ரூபாய் தான் என்னால் சம்பாதிக்க முடிந்தது. இத்தனை ரூபாய்களையும் சம்பாதிக்க. என் அப்பா எவ்வளவு நாள் உழைத்திருக்க வேண்டும்? எவ்வளவு கஷ்டப்பட்டிருக்க வேண்டும்? என்னென்ன துன்பங்களுக்கு ஈடு கொடுத் திருக்க வேண்டும்?

தான் பட்ட கஷ்டங்களை அந்த மகன் நினைத்தான். தந்தை பட்ட கஷ்டங்களையும் நினைத்துப் பார்த்தான்.

அவனது கை, அலமாரியை மூடத் தொடங்கியது. 'வீணாக செலவு செய்ய எல்லோருக்கும் தெரியும்! விநயமாக சம்பாதிக்கத் தான் முடியாது' என்ற உண்மை அவனுக்குப் புரிந்ததால் தான், அலமாரியை மூடி விட்டான்.

'இருக்கின்ற பொருளை இஷ்டப்படி செலவாக்கிக் கஷ்டப்படாமல், சம்பாதிக்கின்ற பொருளுக்கு ஏற்ப, சமர்த்தாக செலவு செய்வேன்' என்று முடிவு எடுத்துக் கொண்டான் அவன். அவனது மனம் இலேசாக இருந்தது, இன்பமான அமைதியும் எதிர்பார்த்த மகிழ்ச்சியும் அவனுக்குக் கிடைத்தது.

இறைவனாகிய தந்தையும், மனிதனாகிய மகனுக்கு இப்படித்தான் தேகத்தில் 'சக்தி' என்கின்ற சகல விதமான சம்பத்தையும் தந்திருக்கிறார். சக்தியை சேர்க்காமலேயே செலவு செய்ய விரும்புகின்ற 'மகன்கள்' தான், இன்று ஏராளமாக நாட்டில் இருக்கின்றனர்.

உடலின் சக்தியை சேர்க்காமல் அதிகமாக செலவு செய்து விடுகின்றவர்களின் வாழ்க்கை, சகதியாகத் தான் மாறிப் போய் விடுகிறது. சக்தியில் உள்ள புள்ளி போல, செலவுக்கும் ஒரு புள்ளி வைத்து, சக்தியை சேர்த்துக் கொண்டால், தேகம் திறமையுடன் செயல்படும், தேடுகின்ற இன்பமெல்லாம் நம்மைத் தேடி வரும், ஓடி வரும், கூடி விடும்.

அந்த அறிவுள்ள மகனாக நாமும் நினைத்தால் வாழலாம் அல்லவா!

# 10. சொர்க்கமும் நரகமும்

சொர்க்கம் என்றால் என்ன? நரகம் என்றால் என்ன? எப்படி இருக்கும்? ஓயாமல் இப்படி தனக்குத்தானே கேள்விக் கேட்டுத் தன்னையும் குழப்பிக் கொண்டு, எதிரில் உள்ளவர்களையும் இடர்ப்படுத்திக் கொண்டு வந்த ஒருவனுக்கு, சொர்க்கத்தையும் நரகத்தையும் போய் பார்க்கின்ற அரிய வாய்ப்பு ஒன்று கிடைத்தது.

சொர்க்கத்தையும் நரகத்தையும் போய் பார்ப்பதாவது? என்ன கதை விடுகிறீர்களா என்று நீங்கள் கேட்பது எனக்குக் காதில் விழுகிறது. கதைதான். கொஞ்சம் கற்பனை... பழுதில்லாமல் கொஞ்சம் பொய். அவ்வளவுதான். இனிமேல் நீங்கள் கதையை தொடரலாம்.

வாய்ப்புக் கிடைத்த அந்த மனிதன் முதலில் நரகத்தைத் தான் போய் பார்ப்பேன் என்று அடம் பிடிக்கிறான். ஆகா! வாருங்கள் என்று வழி அனுப்பி வைக்க அவனும் நரகம் போய் சேர்ந்தான். சிரமம் எதுவுமில்லாமல், நரகத்திற்குப் போவது என்றால் அவ்வளவு கஷ்டமா என்ன?

ஆசைப்பட்டவன் விரும்பிய இடமெல்லாம் சென்று பார்க்க அனுமதிக்கப்படுகிறான். ஆர்வத்தோடு அவன் அங்கும் இங்கும் போய் பார்க்கிறான். நரகம் என்றால் எப்படி எப்படியெல்லாம் வருணிப்பார்கள்?

இங்கே என்னவென்றால், சிறந்த நகரம் ஒன்றில், சிறப்பான வசதிகள் எல்லாம் குவிந்து கிடப்பது போலல்லவா தெரிகிறது? என்ன நகரம் இது?

குறைகள் எதுவும் இல்லையே! ஆடம்பரப் பொருட்கள், அழகு அணிமணிகள், அருமையான காட்சிகள், இவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டே சாப்பிடும் அறைக்குள் நுழைகிறான். அங்கே அறு சுவை உணவு வகைகள். அலங்காரம் செய்யப்பட்ட மேஜைகள் மீது, கண்களைப் பறிக்கும் பாத்திரங்களில் வைக்கப் பட்டிருக்கின்றன.

சாப்பிடும் நேரம் போலும்! நரக வாசிகள் எல்லோரும் சாப்பிடுவதற்காக வந்து அமர்ந்திருக் கின்றனர். அவர்களும் மனிதர்களைப் போலவே தான் இருக்கின்றனர்.

எந்தவிதமான மாற்றமும் இல்லாமலேயே நரகத்திற்கு வந்து, இவ்வளவு வசதிகளையும் அடைகின்றார்களே என்று அவன் எண்ணி பெருமூச்சு விடும் பொழுது, ஒருவன் அசைவதைப் பார்க்கிறான்.

ஓகோ! மனிதனுக்கும் இவனுக்கும் ஒரே ஒரு மாற்றம்தான் இருக்கிறது. சாதாரணமாக மனிதனுக்கு உள்ள கையின் நீளத்தை விட இரண்டு மடங்குகளாக அல்லவா கை நீட்டப்பட்டிருக்கிறது? ஏன் இப்படி கை நீளமாக இருக்கிறது?

அவன் கண்ணைமூடிக் கொண்டு யோசித்தான். சாப்பிடலாம் என்பதற்கு அறிகுறியாக மணி ஒலிக்கிறது. உணவுத் தட்டுக்களின் முன்னே உட்கார்ந்திருப்பவர்கள். ஆர்வத்துடன் உணவை கையில் அள்ளுகின்றனர். வாய்க்குள் போடுவதற்கு முயல்கின்றனர். ஐயோ பாவம்!

கை நீளமாக இருப்பதால், வாய்க்கு நேராக வருவதற்கு ஏற்ப கை மடங்க மாட்டேன் என்கிறது.

அள்ளிய சாதம் காதுக்கு அப்பால் சற்று தூரம் தான் நீண்டு செல்கிறதே தவிர, வாய் பக்கம் வரவே இல்லை.

அடுத்தடுத்து பலமுறை முயற்சிக்கிறார்கள். உணவின் சுவையான மணம் தான் மூக்கிற்குள் செல்கிறதே தவிர, ஒரு சிறு உணவுத்துண்டு கூட வாய்க்குள் போகவில்லை.

பசியால் துடித்த அவர்கள், பதை பதைத்துக் கொண்டே, பலமுறை முயற்சிக்கிறார்கள். முடிய வில்லை.

சுவையான உணவு, சுகமான இருக்கைகள், வேண்டிய வசதிகள். விருப்பத்திற்கு ஏற்ற சூழ்நிலைகள். எதிரே உள்ள உணவை எடுத்துத் தின்று பசியாற முடியாத நிலையில் அல்லவா இருக்கின்றார்கள்?

வேடிக்கை பார்த்த மனிதனுக்கு அவர்கள் வேதனை புரிந்தது. நன்றாக வைத்துக்கொண்டு, நாளாக நாளாக எதையும் அனுபவிக்காமல் சாகிறார்களே. இதுதான் நரகமோ என்று நினைத்துக்கொண்டே, சொர்க்கத்திற் குப் போகத்துடிக்கிறான்.

கொஞ்சம் சிரமப்பட்டு, சொர்க்கத்தை அடைகிறான். அங்கே போனால், நரகத்தை விட அவ்வளவு ஒன்றும் வித்தியாசமான சூழ்நிலை இல்லை.

எல்லா காட்சிகளும், மனித உருவங்களும், நரகத்தில் இருப்பதைப் போல்தான் என்பதை அறிகிறான். உடனே அவனுக்கு, சாப்பிடும் காட்சி நினைவுக்கு வருகிறது. அங்கே விரைகிறான்.

சுவையான உணவுக் குவியல்; சுத்தமான மேஜைகள். அதேபோல கைகள் நீளமாய் அமைந்த

மனிதர்கள். இவர்கள் என்ன செய்யப் போகின்றார்கள் ஆர்வத்துடன் வந்து அமர்ந்த அவர்கள், இதோ உணவை கையில் எடுத்து விட்டார்கள். பிறகு?

அடுத்தவன் வாய் பக்கம் ஒரு கை செல்கிறதே! ஆமாம்! தன் வாய்க்கு வராத உணவை, அடுத்தவன் வாய்க்குக் கொண்டு போய் ஒருவன் ஊட்டுகிறான். அதேபோல் பக்கத்தில் உள்ளவன் கை உணவு, அவன் வாய்க்கு வருகிறது.

இப்படியாக, ஒருவர்க்கொருவர் மாற்றி 'மாற்றி ஊட்டிக் கொண்டு, உதவி செய்தவாறு உணவை உண்கின்றனர். பசி ஆறுகின்றனர். திருப்தி அடைகின்றனர்.'

முக மகிழ்ச்சியுடன் எழுந்து அவர்கள் செல்வதைப் பார்த்த மனிதன், இது தான் சொர்க்கம் என்று எண்ணி வெளியே வருகிறான்.

இருக்கின்றதையெல்லாம் தானே அனுபவிக்க வேண்டும். என்ற வேகத்தில், வெறியில், சுயநலத்தில், பொறாமை உணர்வில், நரக வாசிகள் முயன்றனர். முடிவு! அவர்கள் தானும் அனுபவிக்கவில்லை. பிறரையும் பெற விடவில்லை. ஏமாந்து, ஏக்கமுற்று, இன்னல்பட்டு, எரிச்சலுக்கு ஆளாகி, துன்பமே துணை என்று சோர்ந்து அழிகின்றனர்.

ஆனால், இருப்பதையெல்லாம் பிறருக்குக் கொடுத்து உதவி, அவர்களிடமிருந்து தானும் பெற்று இன்ப வாழ்வை வாழ்கின்றனர் சொர்க்க வாசிகள் என்பதை கண்டுகொண்ட மனிதன், தனக்குள்ளே நகைத்துக் கொண்டானாம்.

கதை தான். மனிதனோ தான் வாழும் சமுதாயத்தில் ஓர் அங்கம். அவனை, கூடி வாழும் மிருகம் என்றுதான் கூறுகின்றார்கள். தனித்து யாராலும் இன்றைய சூழ்நிலையில் வாழவே முடியாது. ஒருவர்க்கொருவர் உதவி செய்துதான், கூடி சேர்ந்து தான் வாழமுடியும்.

ஒருவரை ஒருவர் உணர்ந்து கொண்டு, மனம் விட்டுப் பழகி, விட்டுக் கொடுத்து, பொறுமை காட்டி, பண்புகள் சூழ வாழும் பொழுதுதான் ஒருவர் வாழ்க்கை சொர்க்கமாக இருக்கிறது.

'நானே நானே' என்று நாதசுரம் வாசிப்பவர்கள், தற்பெருமை கொண்டு தருக்கித் திரிபவர்கள், சுயநலமிகள் வாழ்க்கை நரகமாகவே அமைந்து விடுகிறது.

சேர்ந்து வாழும் சிறந்த பண்பு, ஒருவர்க்கொருவர் உதவி வாழும் உன்னத குணம், பலருடன் பழகி பக்குவமாக சேர்ந்து வாழும் பண்பான மனம், மற்றவர்களையும் மதிக்கின்ற உயர்வான எண்ணம், ஒன்றுபட்டால் தான் உண்டு வாழ்வு என்பதை நேரடியாக செயல் மூலம் செயல்படும் அற்புத வாய்ப்பு எல்லாவற்றையும் தருகின்ற ஒரே இடமாக அல்லவா விளையாட்டுக்கள் இருக்கின்றன.

ஒருவன் வாழ்க்கையை சொர்க்கமாக மாற்றி விடும் பண்புகளைத் தரும் விளையாட்டுக்களில், பங்கு பெற்றுப் பார்த்தால் தான் என்ன என்று பலர் யோசிப்பதும் புரிகிறது. ஆமாம்! காற்று, நீர், வெப்பம், போன்ற இயற்கை அன்னையின் வரப்பிரசாதம் போலவே, விளையாட்டுக்களும் விளங்குகின்றன.

விளையாட்டைப் பயன்படுத்தி, உங்கள் வாழ்க்கையை சொர்க்கமாக நீங்களும் அமைத்துக் கொள்ளலாம் அல்லவா!

# 11. கா... கா... கத்திரிக்கா

இது ஒரு ராஜா ராணி கதையல்ல. இது ஒரு ராஜா மந்திரி கதை, காரசாரமாக இல்லாது போனாலும், கொஞ்சம் சுவாரஸ்யமாக இருக்கும். அவ்வளவுதான்.

'மந்திரி நமது மாநகர் தன்னிலே மாதம் மும்மாரி மழை பொழிகிறதா' என்று மன்னர் கேட்பாராம். மழை பெய்யாவிட்டாலும், பெய்கிறது பெய்கிறது என்று மந்திரி பதில் கூறுவாராம். மன்னர் மகிழ்ந்து, வேறு பல கேள்விகளைக் கேட்டு திருப்தியடைந்தவாறு, 'ராஜ பரிபாலனம்' செய்து விட்டு அந்தப்புரத்திற்குள் போய் விடுவாராம்.

அப்படிப்பட்ட ராஜாக்களில் ஒருவர் தான் நமது கதாநாயகனும்.

நமது ராஜா இருக்கிறாரே, அவர் ஒரு போஜனப் பிரியர். அறு சுவை உணவு வகைகளை தன்னுடைய திருப்திக்கு ஏற்றவாறு சமைக்கச் செய்து, ஜமாய்த்து விடுவதில் அவருக்கு நிகர் அவரே.

அவரது உண்ணும் மேசையில், அதிகமாக இடம் பெறும் உணவு வகை கத்திரிக்காய் தான். அவியல், பொரியல், மசியல், வருவல், சாம்பார் என்பதாக அத்தனை அயிட்டங்களிலும் ஆக்ரமித்துக் கொண்டிருப்பது கத்திரிக்காய்தான்.

ஒரு நாள் மன்னர் உணவு உட்கொள்ளும் பொழுது, மந்திரியாரும் உடன் இருக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டு விட்டது.

கத்தரிக்காய் பண்டங்களாக மேசையில் உள்ள பாத்திரங்கள் காட்சியளிப்பதையும், மன்னர் மகிழ்ச்சிப் பெருக்குடன் சாப்பாட்டுப் போர் நடத்திக் கொண்டிருப்பதையும் மந்திரி, ஒருவித 'தமாஷ்' கலந்த பார்வையில் பார்த்துக் கொண்டிருந்தார். மன்னர் இதைப் பார்த்து விட்டார்.

''மந்திரி! இந்த கத்திரிக்காய் என்றாலே எனக்கு உயிர் இது இல்லாமல் ஒரு வாய் உணவு கூட என்னால் ஏற்றுக் கொள்ள முடியாது. இதைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கின்றீர்கள்?'' என்று ஒரு கேள்வியைக் கேட்டு விட்டார் மன்னர் பெருமான்.

மன்னருக்குப் பிடிக்கிறது என்று தெரிந்த பிறகு, மந்திரி அதற்கு மாற்றம் சொன்னால், பிழைப்பாரா? அல்லது மன்னர்தான் பொறுப்பாரா? மந்திரிக்கு இதெல்லாம் தெரியாத சங்கதியா?

கத்திரிக்காய் கரப்பான், சொறி சிரங்குகளை சொகுசாக அழைக்கும் சாமார்த்தியம் அதற்கு நிறைய உண்டு என்பதை அமைச்சர் அறியாதவரா? இருந்தாலும் அரசர் கேட்ட கேள்விக்கு அழகான பதில் ஒன்றை அளித்தார்.

''சாமியிலே மாரியம்மனும், காய்களிலே கத்தரிக்காயும்'' சகலருக்கும் பொதுவான ஒன்றாகும். எல்லா மதத்தினரும் மாரியாத்தாவை நினைத்துப் போற்றிப் பூசிப்பது போலவே, எல்லா வகை உணவு உண்ணுபவர்களும் கத்தரிக்காயை சைவரும் அசைவரும் போற்றி ஏற்றுக் கொண்டு உண்கின்றார்கள்.

அதுவுமின்றி, கத்தரிக்காயைப் பாருங்கள். அதன் அமைப்பே அற்புதம்தான்!

''காய்களுக்கெல்லாம் அதுதான் அரசன். அதாவது, அதன் தலையிலே மகுடம் போல ஒரு அமைப்பு. கிரீடத்திலே குஞ்சம் தொங்குவது போல கீர்த்தியான படைப்பு. ஆண்டவனே அப்படி ஒரு அதிசயமான தோற்றத்தைப் படைத்திருக்கிறான். அதை நீங்கள் விரும்பி உண்பதுதான் நியாயம்'' என்றார் அமைச்சர்.

மன்னர் மனம் மகிழ்ந்து போனார். மந்திரியின் பாராட்டை ஆமோதித்துக் கொண்டார். தன் 'தேர்வு' பற்றி தற்பெருமையும் அடைந்தார்.

அன்று முதல், கத்திரிக்காய் அதிக அளவில் அரசர் உணவில் இடம் பிடித்துக் கொண்டது.

பல நாட்களுக்குப் பிறகு ஒரு நாள், மன்னர் உணவு உட்கொள்ளும் போது, மந்திரி இருக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. மந்திரி அதிர்ச்சிக்கு ஆளாக வேண்டியிருந்தது. காரணம், கத்திரிக்காய் வகையறாக்கள் ஒன்று கூட அங்கு இல்லை.

மன்னர் முகத்தைப் பார்த்தார் மந்திரி. மன்னர் நோய்க்கு ஆளானவர் போன்ற தோற்றம். நமைச்சல், சொரியல் போன்றவற்றில் ஈடுபட்டவாறே, மன்னர் கத்திரிக்காயை 'மோசமான காய்' என்பதாகப் பழித்தும் இழித்தும் பேசினார்.

'இனி கத்திரிக்காயே இந்த நாட்டில் இருக்கக் கூடாது பயிர் செய்யவே கூடாது. உடலுக்கு உதவாத காய், என்ன காய் என்று பேசியவுடன். மந்திரி அரசரைப் பார்த்தார்.

''ஆமாம் அரசே! இந்த காய் மிகவும் மோசமான காய்தான். அதன் திமிரை அடக்குவதற்காகத்தான், ஆண்டவனே அதன் அமைப்பை உருவாக்கியிருக்கிறார். அதன் தலையைப் பாருங்கள். தலைப்பாகத்தில் ஒரு மூடி போட்டது போல வைத்து, அதன் உச்சியில் ஆணி அடித்தது போல வைத்து. அவமானப்படுத்தி இருக்கிறார். அதன் கர்வம் இன்னும் அடங்கவில்லை பார்த்தீர்களா!'' என்று கேவலமாகப் பேசினார்.

மன்னர் மந்திரியின் பதிலால் மகிழ்ச்சியடைந்தார். மந்திரி தப்பித்துக் கொண்டார். அல்ல அல்ல, பிழைத்துக் கொண்டார்.

கத்தரிக்காய் அமைப்பை வைத்துக் கொண்டு, அதன் அழகை உயர்த்தியும். அரசன் விரும்பாதபோது. அதையே தாழ்த்தியும் பேசிய மந்திரி, தந்திரவாதி தானே!

வாழ்க்கையில் இப்படித்தான் பேசி பிழைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. தனக்கு சாதமாகத்தான் பேசவேண்டும் என்று ராஜா எதிர்பார்த்தது போலவே, ஆட்கள் நிறைய பேர் இருக்கின்றார்கள். அவர்களை கா... கா... பிடித்துக் கொள்ள வேண்டும் என்று மற்றவர்களும் முயல்கின்றார்கள்.

உண்மை சில நாட்களில் வெளி வரும் போது, கச்சிதமாகக் 'காகா' பறந்து போய் விடும். பொறுப்பில் உள்ளவர்கள் புரிந்து கொள்ளும் பொழுது. அது போதாத காலமாக அவர்களுக்கு மாறிபோவதும் உண்டு.

விளையாட்டுத் துறைக்கும் இது பொருந்தும் என்று படிப்பவர்கள் நினைத்தால், இதனை உங்கள் சிந்தனைக்கே விட்டுவிடுகிறோம்.

# 12. லொள் ..... லொள் .....

சின்னஞ் சிறு மேடை ஒன்று சிம்மாசனம் போல அலங்கரிக்கப்பட்டிருந்தது. அதைச் சுற்றி வண்ண வண்ணக் காகிதத் தோரணங்கள் வான வில்லாய் வளைந்து, நெளிந்து வடிவழகுக் காட்டிக் கொண்டிருந்தன.

என்னவோ, எதற்கோ என்று எண்ணங்களை வளைத்து இழுத்துக் கொண்டிருந்தன வழிநெடுக வைத்திருந்த வளைவுகள். பதாதைகள். அவற்றிலே எழுதப்பட்டிருந்த வாசகங்கள், வாசிப்பவர்களை சத்தமிட்டுப் படிக்கும் வகையிலே திட்டமிட்டு எழுதப்பட்டிருந்தன.

கண்ணா வா! மன்னா வா! எங்கள் விண்ணே வா! பேசும் விழியே வா! பொன்னே வா! பூம்பொழிலே வா! மின்னார் மேனியனே! எங்கள் மன்மதத் தலைவனே வா வா! என்றெல்லாம் தலைவர் பெருமானின் பெருமைகள், பொறி பறக்கும் வசனங்களால் பூஜிக்கப் பட்டிருந்தன!

அதோ! கூப்பிடும் தூர அளவிலே புழுதி மேகம்! பெருங்கூட்டம் வருவது போல தோன்றுகின்றதல்லவா! அலை கடல் போல ஆரவாரம்! ஆங்காரமாய் அலறுவது போல ஓங்கார சத்தம்!

என்ன ஆச்சரியம்! கூட்டத்தில் உள்ளவர்கள் இரண்டு கால்களால் நடந்து வருவார்கள் என்று எதிர் பார்க்கிறோம். அவர்கள் நான்கு கால்களில் அல்லவா நடந்து வருகின்றார்கள்! ஆமாம்! நாய்களார் நடத்தும் நயமான ஊர்வலம்தானே அது!

மேடைத் திடலை ஊர்வலம் அடைந்தாகி விட்டது. மேன்மைமிகு தலைவர், அழகு பொழியும் அருமை சிங்காதன இருக்கையில் அமர்ந்திட, தொண்டர்கள் கூட்டம் 'இடிபிடி' யோடு எதிரே வந்து குந்திட, இனிமையான குலைப்புடன் இசை மழை. பொழிய, கூட்டம் ஆரம்பமானது.

'அருமைத் தோழர்களே' என்று ஆரம்பித்தார் விழா அமைப்பாளர். 'இன்று நமக்கு நன்னாள், பொன்னாள். நமது இனத்தின் சிறப்புமிக்கத் தலைவர் பல வெளி நாடுகளுக்குப் போய். வெற்றி கரமாக வந்திருக்கும் இனிய நன்னாளைக் கொண்டாடத்தான் நாம் கூடியிருக்கிறோம். ஆகவே, நீங்கள் எல்லாம் உங்கள் கர ஒலி மூலம் தலைவரைப் பாராட்ட வேண்டுகிறோம்' என்று வேண்டுகோள் விடுத்தார்.

ஊளை ஒலி ஊரையே கலக்கி விட்டு ஓய்ந்தது. தலைவர் எழுந்து பேசத் தொடங்கினார். அவரது முகத்திலே கம்பீரம், தற்பெருமை. சோகம் போன்ற நவரசங்களும் நாட்டியமாடிக் கொண்டிருந்தன.

பேசத் தொடங்கினார். பேச்சு எழவில்லை. கனைத்துக் கொண்டு ஆரம்பித்தார். 'என் வெளி நாட்டு அனுபவங்களை உங்கள் முன்னே வைக்க விரும்பு கிறேன் தோழர்களே' என்று தொடங்கி விட்டார்.

பல நாட்டு இயற்கை அழகினைப் படம் பிடித்துக் காட்டினார். ஆறுகள், அருவிகள், மண்டபங்கள், மணிமாடங்கள் எல்லாவற்றையும் சித்தரித்துக் காட்டினார். சேதிகளை எல்லாம் கவிதை மழையாகப் பொழிந்தார்.

எல்லா நாட்டினரின் விருந்து உபசாரத்தையும் வாயாரப் புகழ்ந்தார். இப்படி ஒரு வாய்ப்பு இனி எனக்கு எந்தப் பிறவியிலும் கிடைக்காது என்று கை தட்டல்களுக்கிடையே பேசி முடித்து விட்டு, அந்த இடைவேளையில் கோலி சோடாவும் குடித்துக் கொண்டார்.

பிறகு பேச்சு வரவில்லை. சிறிது நேரம் கூட்டத்திலும் மேடைப் புறத்திலும் மயான அமைதி நிலவியது. தலைவருக்கு என்னவோ நேர்ந்து விட்டது என்று எல்லோரும் தடுமாறித் திகைத்து வேதனையில் கிடந்த பொழுது, மீண்டும் தலைவரின் மணிக்குரலின் சங்கநாதம் ஒலித்தது.

இப்பொழுது அந்தக் குரலில் கம்பீரம் இல்லை, கவலையின் கனம் தெரிந்தது. அவரது பேச்சு இப்படி தொடர்ந்தது.

''என் அருமைத் தோழர்களே! என்னை வெளி நாடுகள் அனைத்துக்கும் வழி அனுப்பி வைத்தீர்கள். உங்கள் நல்ல மனதும் வாழ்த்தும் போலவே என் பயணமும் சீரும் சிறப்பாக, சுகமாக சுவையாக அமைந்தது. மனிதர்கள் எல்லோரும் என்னை வர வேற்றனர். வாழ்த்தினர். விருந்தளித்தனர். விழாக்கள் எடுத்தனர். என்னை கௌரவித்தனர். களிப்பூட்டினர்.

மனிதர்கள் மட்டுமின்றி, மற்ற மிருகங்களும் என்னை ஆதரித்துப் பேசின. என் ஆற்றலைப் போற்றின. என் உயர்வை மதித்தன. மனிதர்களும் மற்ற இனத்து மிருகங்களும் என்னை பாராட்டிப் பரிவுடன் நேசித்த

போது''... தலைவரின் குரல் கரகரத்தது. கண்களில் கண்ணீர் முட்டிக் கொண்டு வந்து நின்றது. வெளியே வந்து விழட்டுமா என்று கண்ணீர்த் துளிகள், பயமுறுத்திக் கொண்டிருந்தன.

மீண்டும் பேச்சினை சிரமப்பட்டுத் தொடர்ந்தார் தலைவர். எல்லோரும் என்னை வரவேற்றபோது, ஒரு கூட்டம் மட்டும், நான் எங்கே சென்றாலும் அங்கே வந்து விரட்டியது. விடாமல் விரட்டியது. யாரோ ஒரு பயங்கர எதிரியைப் பார்த்து விட்டது போல விரட்டியது.''

''யார் விரட்டியது! இங்கே சொல்லுங்கள்! நாங்கள் இருக்க நீங்கள் அஞ்சலாமா! கூசாமல் கூறுங்கள். கொன்று குவித்து விடுகிறோம்'' என்று கூட்டத்திலே கோபக் குரல்கள் கொப்பளித்துக் கொண்டு எழுந்தன.

''யார் யார் என்ற கேள்விக்குப் பதில் கூறுகிறேன்! அந்தக் கூட்டம் நம் இனத்துக் கூட்டம்தான். அவைகள் தான் என்னை வந்து வந்து விரட்டின. மற்றவர்கள் முன்னே அவமானப் படுத்தின. எல்லோரும் போற்றுகின்ற போது நம் இனத்து ஜீவன்கள் மட்டும் ஏன் என்னைப் பார்த்துக் குலைக்க வேண்டும்?''

நாய்கள் ஒன்றை ஒன்று பார்த்துக் கொண்டன. அவைகளுக்குப் புரியவில்லை, தலைவர் பேச்சை முடிக்கும் பொழுது... எங்கேயிருந்தோ ஒருகல்... சலசலப்பு - கூட்டத்தில் குழப்பம். லொள் லொள் என்று ஒன்றையொன்றுக் கடித்துக் கொண்டு ஓடத் தொடங்கின.

தலைவரை பத்திரமாக மேடையிலிருந்து இறக்கிக் கொண்டு சென்றபொழுது, அருகிலிருந்த அனுபவசாலி ஒருவர் கூறினார்.

நாய்கள் இனத்தில் மட்டுந்தானா இப்படி! மனித இனத்திலும் தான்.

ஒவ்வொரு 'துறையைச் சேர்ந்தவர்கள். அந்தந்தத் துறையைச் சேர்ந்தவர்களை, நம்மை விட மோசமாகத் திட்டிக் குலைத்து விரட்டுக்கின்றார்கள். அவர்களை விட நாம் ஒன்றும் அவ்வளவு மோசமல்ல' என்று கூறினார்.

அப்பொழுது லொள் லொள் என்று ஒரே சத்தம்... ஆமாம்! ஆமாம் என்று எஞ்சியிருந்த நாய்கள் அனுபவசாலியின் கருத்தை ஆமோதித்தவாறு தலையை கர்வத்துடன் ஆட்டி அசைத்துக் கொண்டு நின்றன.

# 13. 'தம்' பிடித்த தவளை!

இராமனுக்கு எப்பேர்பட்ட கவலை? இப்படி ஒரு நிலைமை ஏற்படலாமா? யாருக்கும் வராத, யார் வாழ்விலும் நடந்திராத சம்பவம் ஒன்றல்லவா நேர்ந்து விட்டது! எல்லாம் வல்ல இராமனுக்கே இந்த கதி என்றால், நாம் எல்லாம் என்ன செய்யப் போகிறோம்? என்ன செய்ய முடியும்?

அது சரி... யார் அந்த இராமன்? அவனைப் பற்றி எங்களுக்கு என்ன தெரியும்? என்ன தான் அவனுக்கு நேர்ந்து விட்டது என்று நீங்கள் 'தம்! பிடிப்பதும், முணுமுணுப்பதும் கேட்கிறது! உடனே சொல்லா விட்டால், மேற்கொண்டு படிக்க மாட்டோம்' என்று நீங்கள் கோபித்துக் கொண்டு கூறுவதற்கு முன்பே...

பகவான் பெயரை சொல்ல நான் ஏன் தாமதம் செய்து, உங்கள் கோபத்துக்கு ஆளாக வேண்டும்?

சாட்சாத் ஸ்ரீராமன் தான் அவன், சகல உயிர்களையும் சம்ரட்சித்துக் காக்கின்ற திருமாலின் திரு அவதாரமாகிய ஸ்ரீராமன். சீதா ராமன். அந்த அயோத்தி ராமனுக்குத்தான் அப்படி ஒரு அசம்பாவிதம் ஏற்பட்டு விட்டது.

தாயின் சொல்லைக் கேட்டு, தந்தையின் ஆணையாக வந்த சொல்லுக்காக, ஸ்ரீராமன் கானகம் செல்ல, 'நானும் வருவேன்' என்று நாயகி சீதா பிராட்டியும் பின் தொடர, சின்னவன் இலக்குவனும் சேர்ந்து நிழலாக வர. இந்தக் கதைதான் உங்களுக்குத் தெரிந்த கதையாயிற்றே!

கானக வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்த காலகட்டத்திலே தான். இந்தக் கடுமையான சோதனையும் வேதனையும் இராமனுக்கு ஏற்பட்டு விட்டது. அழகிய சீதையின் மேல் ஆசைப்பட்டுப் போன இராவணன் என்னும் இலங்கை மன்னன், இராமன் இல்லாத நேரம் பார்த்து, சீதையை சிறையெடுத்துப் போய் விட்டான்.

செய்தியறிந்த இராமன் திகைத்தான். திடுக் கிட்டான். சினம் கொண்டான். சீறியெழுந்தான். சிறுமை புரிந்த தீயவனை தீர்த்து தருமத்தைக் காக்க உறுதி கொண்டான். அம்பை எடுத்தான்.

வில்லை வளைக்கு முன்னே, குறிக்குரிய கொடுங்கோலனைக் கண்டாக வேண்டும்! எங்கே போனான்? எப்படியிருப்பான் அவன்! எவ்வாறு கண்டு பிடிப்பது என்பன போன்ற யோசனைகள் தோன்றிடவே, இராமன் உட்கார்ந்து யோசிக்கும் நிலைமைக்கு உட்படுத்தப்பட்டான்.

நெடிதுயர்ந்த மரம் ஒன்றின் நிழலில் வேர் இருக்கை ஒன்றில் மெதுவாகப்போய் அமர்ந்து கொண்டான். கையில் எடுத்த அம்பைத் தரையில் ஊன்றிய வண்ணம் சிந்தனை செய்யத் தொடங்கினான்.

எவ்வளவு நேரம் சிலையாக அமர்ந்திருந்தானோ? எத்தனை நேரம் சிந்தனைப் பிழம்பாக இருந்தானோ அவனுக்கே தெரியாது!

திடீரென நிமிர்ந்தான் இராமன். வெந்தணலாகக் கனிந்த துன்பத்திற்கு வேறு வழி கண்டுவிட்ட வன்

போல நிமிர்ந்தான் இராமன். அம்பினை எடுத்து, தனது முதுகுப் புறம் உள்ள அம்புறாத் தூணியில் செருக நினைத்தான்.

தரையில் ஊன்றியிருந்த அம்பின் நுனியிலே இரத்தத் துளி. இரத்தம் அதில் எப்படி வந்திருக்கும்? தரையில்தானே ஊன்றியிருந்தோம்? தவறு ஏதோ நடந்து விட்டது என்று தடுமாற்றம் அடைந்த ராமன், கீழே குனிந்து பார்த்த பொழுது முதுகில் இரத்த ஊற்றுடன் தவளை ஒன்று படுத்துக்கிடந்தது.

'தவறுதலாக தவளையின் முதுகின் மேல் அம்பினை ஊன்றி, அழுத்தியவாறே சிந்தனை செய்திருக்கிறோம். இந்தத் தவளையும் வாய்த் திறவாமல். வலியைப் பொறுத்துக் கொண்டு கிடந்திருக்கிறதே' என்று உணர்ந்து கொண்ட இராமன், தவளையைப் பார்த்து அனுதாபத்துடன் கேட்டான்.

அம்பு முதுகில் அழுத்தியவுடனே ஒரு சத்தம் கொடுத்திருந்தால். இப்படி ஆழமாக அம்பு பாய்ந்திருக்காதே! இரத்தம் இப்படி அதிகமாக சிந்தியிருக்காதே என்றான் இராமன்.

தனது வலியையும் வேதனையையும் வெளிப்படுத்தி விடாமல், 'தம்' பிடித்துத் தாங்கிக் கொண்டிருந்த தவளை பேசத் தொடங்கியது.

'யாராவது தொந்தரவு செய்தால், அந்த துன்பத்தைத் தாங்க முடியாமல், ''ராமா, ராமா'' என்று அழைத்து ஆறுதல் அடைவோம். இங்கே இராமனே துன்பம் தரும்பொழுது. யாரை அழைத்து அடைக்கலம் புக

முடியும்! அதனால்தான். அந்த வேதனையையும் தாங்கிக் கொண்டேன்' என்றது தவளை.

இப்படி ஒரு நிகழ்ச்சி இராமாயணக் காவியத்தில் வருவதாகக் கூறுவார்கள் கதாகாலட்சேபம் செய்யும் பெரியோர்கள். தாங்கிக் கொண்ட தவளையின் பக்தி நமக்குப் புரிகிறது. என்ன செய்கிறோம் என்று தெரியாமல் இராமன் செய்த தவறும் நமக்குப் புரிகிறது.

இராமனுக்குத் தெரிந்திருந்தால், அந்த வேதனைச் சம்பவம் விளைந்திருக்காது. தவளை தன் வாய்த் திறந்து தெரிவித்திருந்தால், அதற்குத் துயரமும் தோன்றியிருக் காது. தொடர்ந்தும் இருக்காது.

அந்த அற்புத சக்தி வாய்ந்த 'தம்' பிடித்த தவளையாக நமது உடற்கல்வித் துறையும் ஆசிரியர்களும் இருப்பதாகக் கற்பனை செய்து கொள்ளுங்கள். அதன் பிறகு, உங்களுடைய கற்பனைக்கே மீதியை விட்டு விடுகிறேன்.

# 14. ஒரு குழந்தை அழுது கொண்டிருக்கிறது!

நாகரிகத்தின் நிழல் கூடப் படாத குக்கிராமம். மலைப் பாங்கான பிரதேசத்தில், இரண்டு குன்றுகளுக்கிடையே உருவாகியிருந்த கிராமம் அது.

உழைப்பே உலகம் என்று நம்பி வாழும் மக்கள். ஒருவரை ஒருவர் நம்பி வாழ்ந்து அன்பு காட்டியும், வம்பு வந்த காலத்து வசை மொழிகள் பேசியும். காலப் போக்கில் மறந்து, மீண்டும் கலகலப்பு ஊட்டிக் கொண்டும் வாழும் குடி மக்களைக் கொண்ட கிராமம் அது.

நான்கு ஐந்து மைல்கள் தூரத்தில் ஒரு பள்ளிக்கூடம். அங்கே போய்த் தான் குழந்தைகள் படிக்க வேண்டும். படிப்பில் நாட்டம் உள்ள குழந்தைகள், நடைக்குப் பயந்து போய் பாதியிலே படிப்பை நிறுத்தி விட்டு, வயல் வேலைக்குப் போய்விடுவார்கள்.

எப்படியாவது முன்னேறிவிட வேண்டும் என்ற வெறியுள்ள, விவேகமுள்ள ஒரு சில குழந்தைகள் தான், பள்ளிக்குப் போய் படிப்பை முடித்துக் கொண்டார்கள். அப்படி படிப்பை முடித்து வெளியூர் போய் வெளியே பெரிய வேலைகளில் அமர்ந்தவர்களும் உண்டு.

அங்கே மாரியம்மன் திருவிழா தொடங்கிட இன்னும் இரண்டு மூன்று நாட்கள் இருந்தன. கிராமமே விழாக் கோலம் கொண்டிருந்தது. வெளியூரிலிருந்து ஏறத்தாழ எல்லா உள்ளூர் வாசிகளும் வந்திருந்தனர். அவரவர்கள்

தங்கள் அனுபவங்களை பரிமாறிக்கொண்டிருந்தனர். அன்பை பகிர்ந்து கொண்டனர். ஒரு ஆனந்த மயமான சூழ்நிலையில் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தனர்.

அப்பொழுது பயங்கரமான ஒரு அழுகுரல் கேட்டது. எல்லோரும் திகைததுப் போய், தங்கள் தங்கள் வீடுகளிலிருந்து வெளியே வந்து பார்த்தனர்.

'என் கைக் குழந்தையை கழுகு ஒன்று தூக்கிக் கொண்டுப் போகிறதே' என்று ஒருத்தி ஓலமிட்டுக் கொண்டே ஓடி வந்தாள். அவள் போட்ட சத்தம், அந்த மலையடிவாரத்திலே பயங்கரமாக மோதி எதிரொலித்தது.

கோழிக் குஞ்சைத் தான் கருடன் தூக்கிக் கொண்டு போகும்? குழந்தையையுமா? என்று வியந்து பார்த்துக் கொண்டிருந்தார்கள் சிலர். யார் வருகின்றார்கள் என்று கவலைப்படாமலேயே, கழுகு பறந்துப்போய்க் கொண்டிருக்கும் திசை பார்த்து பலர் ஓடிக் கொண்டிருந்தார்கள்.

கிட்டத்தட்ட, அந்தக் கிராமமே அந்த சறுக்கு மரம்போல் அமைந்த அந்தக் குன்றின் அடிவாரத்தில் கூடி விட்டது. குன்றின் உச்சியில் இருந்த சிறு இடத்தில் குழந்தையை வைத்த அந்தக் கழுகு, கூட்டத்தைப் பார்த்ததும் பறந்து போய் விட்டது.

குழந்தையைக் காப்பாற்ற வேண்டுமே! வெயிலின் வேதனையில் குழந்தை எழுப்பிய அழுகை, கூடியிருந்தவர்களைக் கலக்கி விட்டு இருந்தது. குழந்தை இரண்டு முறை புரண்டு விட்டால் கீழே விழுந்து விடும்! பின் அதன் பிய்ந்த உறுப்புக்களைக் கூட காண முடியாது.

எப்படியாவது காப்பாற்றி விட வேண்டும் என்று அந்தக் கூட்டத்தில் இருந்த இளைஞர்கள் பலர் முயன்றனர்

குன்றிலிருந்து கொஞ்ச தூரம் ஏறி, பின்னர் சறுக்கிக் கொண்டு விழுந்தவர்கள் பலர். ஏனெனில், பிடித்துக் கொண்டு மேலேற முடியாத வண்ணம் செங்குத்தாக அமைந்த பாறைகளால் உருவான குன்று அது.

இளமையுடையவர்களால் பலத்தை மட்டுமே பயன்படுத்த முடிந்தது. என்றாலும் ஏற முடியவில்லை. சறுக்கி விழுந்து கொண்டே இருந்தார்கள்.

மலையேறும் வீரதீரச் செயல்கள் செய்த ஒருவர் அங்கே இருந்தார். நீண்ட கயிறு ஒன்றைக் கொண்டு வரச்செய்து, பாதி வரை ஏறிப் பார்த்து, முடியாமல், இறங்கி விட்டார்.

என்ன செய்வது என்றே யாருக்கும் ஒன்றும் புரிய வில்லை. பலர் பல வழிகளில் பலவாறாக முயன்று கொண்டிருந்தனர். அதோ ஒரு உருவம். குழந்தைக்கு அருகில் சென்று விட்டது. இதோ! குழந்தையைக் கையில் ஏந்திக் கொண்டது!

ஏறிய வேகம் போலவே சறுக்குப் பாறையில் இறங்கி வந்து சேர்ந்தது. எல்லோருக்கும் ஆச்சரியம்! யார் யார் என்று கேட்ட கேள்விக்கு விடையாக நின்றாள் அந்தப் பெண்.

ஆண்களாலே முடியாத அந்தக் காரியத்தை அந்தப் பெண் எப்படிச் செய்தாள்? எவ்வாறு செய்ய முடிந்தது?

அந்தப் பெண்ணால் தான் செய்ய முடியும்! ஏன் தெரியுமா? அந்தப் பெண்தான் அந்தக் குழந்தையின் தாய்.

தாய்ப் பாசம் தந்த வேகம், தைரியம், பிடிவாதம், பெருமுயற்சி, உத்வேகம்தான் அவளை ஏற முடியாத குன்றில் ஏறச் செய்தது. தன் உயிரையும் பொருட்படுத்தாமல் தன் குழந்தையைக் காப்பாற்றிக் கொண்டு வந்தாள். தாயின் வீரத்தைப் போற்றினர் பலரும். தாயோ பிறரது பாராட்டைக் கூடப் பொருட்படுத்தாது, தன் குழந்தையை ஆரத்தழுவி கொஞ்சிக் கொண்டிருந்தாள்.

'தாய்ப் பாச'த்திற்கு இவ்வளவு சக்தியா!

உடற்கல்வித் துறை என்னும் குழந்தை இப்பொழுது இப்படித்தான் குன்றிலே தனியாக விடப்பட்டதோர் சூழ்நிலையில் அழுது கொண்டிருக்கிறது. கீழே விழுந்து விடுமோ மீண்டும் தேறி விடுமோ என்று பரிதாப நிலைக்குள் கிடக்கிறது.

பலரும் பலவழிகளில் முயன்று கொண்டிருக்கிறார்கள். தாயாக இருந்து அரசு காக்க வேண்டும் என்று விரும்புகிறோம். எண்ணம் திட்டமாகி, திட்டங்கள் செயலாகி, குழந்தை காக்கப்பட வேண்டும் என்று எல்லோருமே விரும்புகிறோம்! இப்பொழுது குழந்தை அழுது கொண்டிருக்கிறது என்று மட்டுமே கூற விரும்புகிறோம்!

தாயே பாராமுகமாக இருந்தால் சேயின் நிலை என்ன?

# 15. பிரச்சினைகள் பேசுகின்றன!

வழக்கத்திற்கு மாறாக சீக்கிரமாக விழித்துக் கொண்டான் வடிவேலன். எட்டு மணி என்பதுதான் அவனுக்கு அதிகாலைப் பொழுது. அப்படி விழித்து விட்டாலும்கூட, பத்து நிமிடம் படுக்கையில் புரண்டு புரண்டு படுத்திருப்பான்.

பத்து முறை அழைத்தாலும், 'ம்' சத்தம் தான் கேட்குமே தவிர, 'பள்ளி எழுச்சி' என்பது அவ்வளவு எளிதல்ல. அப்படி இருக்கும் வடிவேலன், இன்று காலை 5 மணிக்கே விழித்துக் கொண்டான்.

பரக்கப் பரக்கப் படுக்கையை விட்டு எழுந்து வந்தான். கண்களை தேய்த்து விட்டுக் கொண்டு, சோம்பல் முறித்து, பெரிய கொட்டாவியை சத்தமாக விட்டபடி, திண்ணையில் வந்து உட்கார்ந்து, பெரிதாக நின்று கொண்டிருந்த தூணில் சாய்ந்து கொண்டான்.

இப்பொழுது அவனது விழிகள் இரண்டும் எதிரே, அதாவது அவன் வீட்டிற்கு எதிரே இருந்த குடிசைமீது ஆவலாக மொய்த்துக் கொண்டிருந்தன.

குடிசையை அவன் பார்த்ததே இல்லையா? தினம் தினம் அதன் முகத்திலேதான் விழிப்பவனாயிற்றே! இன்று அதை அப்படிப் பார்க்க வேண்டிய அவசியம் என்ன?

அவசியம் மட்டும் அல்ல! அவசரமும் வந்து விட்டது.

அந்தக் குடிசையில் வசிக்கும் குமரனை இன்று தூங்கி விழித்ததும் பார்த்தாக வேண்டும். அவன் எப்படி இருக்கிறான் என்பதைத் தெரிந்து கொண்டாக வேண்டும். அந்த ஆவல்தான் அவனை அவ்வளவு சீக்கிரம் எழுப்பிவிட்டது.

காலை 6 மணியாயிற்று. அலாரம் வைத்து எழுபவன் போல குமரன் விழித்துக் கொண்டான். அவனைச் சுற்றியுள்ள சூழ்நிலையைப் பார்த்து சிரித்துக் கொண்டான்.

அவனைச் சுற்றிக் குழந்தைகள். நான்கு குழந்தைகள். எல்லாம் பத்து வயதிற்குள்ளாக நடமாடும் பிறவிகள். ஒரு குழந்தையின் கால்கள் இரண்டும் அவன் வயிற்றின் மேல், இன்னொரு குழந்தையின் ஒரு கால் அவனது கழுத்தை அழுத்திக் கொண்டிருந்தது.

மற்றொரு குழந்தை அவன் மார்போடு கையைப் போட்டவாறு உறங்கிக் கொண்டிருந்தது. இன்னொரு குழந்தை தனியே படுத்து உறங்கியது. அது பொழிந்த 'சிறுநீர்' ஓடி வந்து அவனது வேட்டியை நனைத்து விட்டிருந்தது.

இத்தனையையும் பார்த்து அவன் சலித்துக் கொள்ளவில்லை. மாறாக சிரித்துக் கொண்டான்! அவனது மனைவி வெளியே வாசலில் தண்ணீர் தெளிக்கிற சத்தம் கேட்டது. மெதுவாக எல்லாவற்றையும் அப்புறப்படுத்திவிட்டு வெளியே வந்தான் குமரன். வாசலுக்கு வெளியே வந்தவனைப் பார்த்துவேகமாக வந்தான் வடிவேலன்.

பக்கத்தில் வந்து பார்த்தாலும் பாராமுகமாகப் போய் விடுகிற வடிவேலனா இன்று வாய் கிழிய சிரிக்கிறான்! குமரனுக்கு ஒரே ஆச்சரியம்!

குமரனும் சிரித்து வைத்தான். இதுதான் தருண மென்று எதிரே வந்து நின்றான் வடிவேலன். எதையோ பேச வேண்டுமென்று விரும்பியவன் போல, அவனிடம் பரபரப்பு இருந்தது.

'நன்றாகத் தூங்கினாய் போலிருக்கிறது' என்றான் வடிவேலன். ஆமாம்! 'படுத்தால் தூக்கம்தான், விடிந்தால், விழிப்பு வந்துவிடும்' என்றான் குமரன்.

அதெப்படி உன்னால் தூங்கமுடிகிறது! உன் குடிசைக்குப் பத்தடி நீள அகலம் தானே உண்டு. நீ நீட்டிப் படுத்துவிட்டால். உன் மனைவியே ஒதுங்கிப் படுத்தால்தான் முடியும்! நாலு குழந்தைகளும் 'ஓரம் கட்டிக் கொண்டாலும்' எப்படி உறங்க முடியும்?

இன்னும் விட்டுவிட்டாயே வடிவேலா! காதிலே பாடுகின்ற கொசுக்கள், மூட்டைப் பூச்சிக்கடி! போர்த்திக்கொண்டால் புழுக்கம், போர்த்தாவிட்டால் கொசுக்கடி.

ஆமாம்! ஆமாம்! எனக்கு பஞ்சணை, மெத்தை, காற்றாடி எல்லா சுகமும் இருக்கிறது. ஆனால் தூக்கம்தான் வரவில்லை. உன்னால் எப்படி உறங்க முடிகிறது?

ஆமாம் வடிவேலா! பிரச்சினைகள் இருக்கத்தான் இருக்கின்றன. என்னைப் பேய்ப்பிடியாக பிடித்து

பேசிக்கொண்டுதான் இருக்கின்றன. பிரச்சினைகள் பேசுகின்றன என்று நான் கேட்கத் தொடங்கி விட்டால், பிரமன்கூட பிறப்புத் தொழிலை மறந்து விடுவான். நிறுத்தியும் விடுவான்.

நாம் பிரச்சினைகளின் மேலே மிதக்க கற்றுக்கொள்ள வேண்டும். பிரச்சனைகளுக்குள் அமுங்கிப் போய்விட்டால், அப்புறம் நம்கதி அதோ கதிதான்.

எனக்கு உன்னைப்போல் வசதியாக வீடும் படுக்கையும் வந்தால்தான் உறங்குவேன் என்று இருந்தால், ஒருநாள்கூட என்னால் உறங்க முடியாது. காலம் பூராவும் கொட்டக் கொட்ட விழித்துக் கொண்டுதான் இருக்க வேண்டும்.

பிரச்சினைகள் பேசட்டும். தாக்கட்டும் போராடட்டும் நாம் நம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டால் தூங்க மட்டுமல்ல இந்த உலகத்தில் பெரிய மனிதர்களாகக்கூட உயர்ந்து விடலாம் என்று சொல்லியபடி சென்றான் குமரன்.

வடிவேலனுக்கு அவன் சொன்னது புரியவில்லை 'ம்' என்று உதட்டை பிதுக்கியபடி உள்ளே சென்றுவிட்டான். இப்பொழுதுதான் தூக்கம் வருவது போலிருந்தது.

வாழ்க்கையில் முன்னேறி வந்த ஒவ்வொருவரும் வசதியான குடும்பத்தில் பிறந்து, வசதியாக வாழ்ந்தவர்களல்லர். இல்லாமையும் இயலாமையும் அவர்களது தலையாய பிரச்சினைகளாகவே இருந்தன

தான் முன்னுக்கு வந்திட தடைகளை தவிர்த்துவிட்டு மேலேறி வெற்றி கண்டவர்கள் அவர்கள்.

இல்லையே என்று குறைபட்டுக் கொண்டவர் களும், இவையெல்லாம் இருந்தால் நான் சாதாரணமாக செய்து முடித்து விடுவேன் என்று பட்டியல் போட்டுப் பேசிக் காலத்தை கழிப்பவர்களும் வாழ்வார்களே தவிர, முன்னேற முடியாது. முடியவே முடியாது.

பேசும் பிரச்சினைக்குப் பதில் சொல்லாமலே செயலால் செய்து காரியம் சாதிப்பவர்களே வெற்றி பெற முடியும். இருக்கும் சௌகரியக் குறைகளை ஒதுக்கிவிட்டு உறங்கி மகிழும் குமரனைப்போல, இருக்கும் வசதியை வைத்துக் கொண்டு சரியாகச் செய்து ஆற்றலைக் காட்டுகின்றவர்களே பேரும் புகழும் பெறுவார்கள்.

எத்தனையோ வடிவேலனும் குமரனும் நம்மிடையே உலவத்தான் உலவுகின்றார்கள். யாரைப் பின்பற்றுவது என்பதில் தான் நமது உயர்வும் தாழ்வும் உள்ளது. அது அவரவர் மனப்பண்பையும் தெம்பையும் பொறுத்தே அமைகிறது என்பதே உண்மை நிலைமையாகும்.

# 16. அகரமும் சிகரமும்

அஸ்திவாரத்தை நினைக்கவில்லை.

அலங்கார மாளிகையை நினைக்கிறோம்.

அழகு படுத்த முனைகிறோம்.

'அ ஆ' என்று அகரத்தைக் கற்க முனையவில்லை.

அருமைமிகு கவித் திறமையும் ஆன்ற எழுத்தாற்றலும் பெருக வேண்டும் என்று விழைகிறோம்.

நிற்கவே இயலவில்லை. இதிலே, நெடுந்தூரம் ஓடவும், பயணம் போகவும் நினைக்கிறோம். களைக்கிறோம்.

என்றாலும், இராட்டினக் குதிரையில் ஏறியவர் விரைந்து பறந்தாலும், இருந்த இடத்திலேயே சுற்றிக் கொண்டு இருப்பது போலேவே இருக்கிறோம்.

துடிக்கிறோம்.

எவ்வளவோ பொருளை அள்ளி இறைக்கிறோம்.

கூசாமல் கொடுக்கிறோம்.

என்றாலும் காலமும். உழைப்பும். பொருளும் முயற்சியும் தான் வீணாக செலவாகின்றதே தவிர, சிந்தை விரும்பியது கிடைக்கவில்லை.

உடலுக்கு ஒரு கல்வி.

உடலுக்காகத் தான் அந்தக் கல்வி

உடலை நினைக்கின்ற கல்வி.

உடலால்தான் உலக வாழ்க்கையை அனுபவிக்க முடியும் என்ற உண்மையை உணர்த்துகின்ற ஒப்பற்ற கல்வி.

மனித குலத்திற்குத் தேவை என்று உலகமே ஒத்துக் கொண்டு, உடன்பட்டு, பின் பற்றிச் சென்று பெருமை சேர்த்த நாடுகளை, உலகத்திற்கு உச்ச நிலைக்கு உயர்த்திச் சென்ற கல்வி அது!

அதனை நாம் உதாசீனம் செய்கிறோம்.

'உடற்கல்வியை வேண்டாம் என்று சொல்ல வில்லை. ஆனால் விரும்பவில்லை - விருப்பமில்லை' என்று ஒதுக்கி வைத்திருக்கிறோம் நாம்!

அதனால் என்ன? வாழ்க்கை நடக்க வில்லையா என்று வாய் கூசாமல் கூறுகிறோம்.

வம்பு பேசுகிறோம்.

வாதாடுகிறோம்.

அதனால் என்ன? இன்று வழிமாறிப் போயிருக்கிறோம்.

இளம் குழந்தைகளுக்கு நிற்க, நிமிர்ந்து நிற்க, நிமிர்ந்து நடக்கக்கூடக் கற்றுத்தராத சூழ்நிலையைக் கொடுத்திருக்கிறோம்.

ஆமாம்! கெடுத்திருக்கிறோம்.

இன்றைய குழந்தைகள் நாளைய தலைவர்கள் என்று மார்தட்டிப் பேசுகிறோம்.

மயங்கும் சொற்களை அள்ளி வீசுகிறோம். பிறகு?

பள்ளிப் படிப்பிலே ஏட்டுக் கல்வி இருக்கிறது.

அதற்கு மேலே பொது அறிவு வேண்டும்.

மாணவர்களுக்கு இயற்கையான உடல் நலம் உண்டு.

அதற்கு மேலும் உடல் திறம் வேண்டும்.

பொது அறிவை வளர்க்க நூலகங்கள் வேண்டும். அதுபோல உடல் வளத்தைப் பெருக்க உடற்கல்வித் துறை வேண்டும். இது இரண்டும் தான் ஒரு மனிதனை முழு மனிதனாக மாற்றுகின்றன.

குழந்தைகளுக்கு முழு வளர்ச்சியைத் தருகின்ற பொது அறிவையும் பொது உடல் வளத்தையும் தர நாம் மறந்து விட்டோம். அல்ல அல்ல... மறைத்து விட்டோம்.

ஆனால், படிப்பவர்கள் எல்லாம் நல்லவர்களாக, வல்லவர்களாக வர வேண்டும் என்று மட்டும் விரும்புகிறோம்.

அடிப்படையான உடல் வளமாகிய **அகரத்தை** மறந்து விட்டோம்.

தங்கப்பதக்கம் வாங்கும் ஆசையென்னும் சிகரத்தில் நிற்க விரும்புகிறோம்.

முகத்திற்குள் கண்கள் போல, வாழ்வின் சுகத்திற்குக் கண்கள் போன்று இருக்கின்ற உடற்கல்வித் துறையையும் நூலகத் துறையையும் ஏன் மறந்தே போனோம்?

அதற்காக அதிக முன்னேற்றம் காண ஏன் மறந்து போனோம் என்பதுதான் புரியவில்லை.

இன்னும் காலம் கடந்து விடவில்லை.

இன்றே எண்ணி, நன்றாக செயல்பட்டாலும், நம் தமிழகம் முன்னணிக்கு வந்து விடும்.

அகரத்தை - அடிப்படையை நினைப்போம் - சிகரத்தில் வீற்றிருப்போம்!

# 17. தண்ணீரும் தெய்வமும்

குருநாதரின் முகத்தையே குறுகுறு வென்று பார்த்துக் கொண்டிருந்தான். அந்த சீடன். தான் கேட்ட கேள்விக்கு விடை இன்னும் கிடைக்கவில்லையே என்ற ஏக்கம், அவனை விடா முயற்சியுள்ளவனாக மாற்றிக் கொண்டிருந்தது.

குருவின் திருவிழிகள் தன் மீது படாதா என்று ஏங்கிய சீடனின் ஏக்கத்தை மேலும் தாக்குவது போல தியானத்தில் அமர்ந்திருந்தார் குருநாதர். பொறுமையிழந்தவனாக, ஆனால் காரியம் சாதிப்பவனாக குருநாதரின் காலடியிலே அமர்ந்திருந்தான் அந்த சீடன்.

கண் விழித்த குருநாதரின் கடைக்கண் கடாட்சம் அவன் மீது பட்டது. களிப்பின் எல்லைக்கே போய்விட்டான் சீடன். குருநாதா! என்னை தெளிவு படுத்துங்கள். தீராத வேட்கையின் தணலில் தீய்ந்து கொண்டிருக்கிறேன்!

'மயங்காதே மகனே! உனக்கு காலம் தான் பதில் சொல்லும். காலத்திற்காக காத்திரு' என்றார் குருநாதர்.

'கடவுளை நான் காணவேண்டும்! காலத்திற்காக காத்திருக்க முடியவில்லை. நீங்கள் காட்டுகின்ற பாதையில் தான் துணிந்து நடக்க விரும்புகிறேன்!'

கடவுள் எங்கும் இருக்கிறார். தூணிலும் இருக்கிறார். துரும்பிலும் இருக்கிறார். தணலிலும் இருக்கிறார். தண்ணீரிலும் இருக்கிறார். தேடித் திரிய வேண்டாம் மகனே! அவரே உன்னைத் தேடி வருவார் என்று பேசி, சீடனை திருப்தி படுத்தப் பார்த்தார் குருநாதர்.

'தண்ணீரிலுமா இருக்கிறார்' என்றான் சீடன். மிக எளிதாக இறைவனைப் பார்த்து விடலாம் என்பதில் தான் அவனுக்கு எவ்வளவு வேகம்!

ஆமாம்! தண்ணீரிலும் இருக்கிறார்! குருநாதரின் பதில் அந்த சீடனின் உள்ளத்தை குதூகலப்படுத்தியது. தன் கேள்விக்குக் கிடைத்த பதிலில் கிளர்ச்சியடைந்து போனான்.

விடையை வாய் மொழியாகவே வைத்துக்காக்க அவன் விரும்பவில்லை. அனுபவ ரீதியாக ஆய்ந்து - அறிந்து, ஆண்டவன் தரிசனத்தை அனுபவிக்க வேண்டும் என்ற ஆவேச உணர்வில் கிளம்பி விட்டான் அந்த சீடன். குருநாதரும் சிரித்தவாறே ஆசிர்வதித்து அனுப்பிவைத்தார்.

சீசா ஒன்றில் தண்ணீர் இருப்பதைப் பார்த்தான் பெரும் தெய்வத்தை தேடித் திரிந்த சீடன். அருகில் சென்றான். 'தெய்வமே' என்றான் தண்ணீரைப் பார்த்து.

சீசாவின் உள்ளே இருந்த தண்ணீர், சீடனைப் பார்த்து, 'தெய்வமா நான். அல்ல அல்ல. வெறும் தண்ணீர். தவறாக அப்படி நினைக்காதே' என்றது தண்ணீர்.

தண்ணீரே தெய்வமாய் இருக்கிறது என்றார் என் குருநாதர். தெய்வம் தானே நீர் என்றான் சீடன்.

'தெய்வத்தின் படைப்பு நான், தெய்வத்திற்கோ வடிவம் இல்லை. சொந்தம் இல்லை, பந்தம் இல்லை. பிறப்பு இல்லை. விடுப்புமில்லை. நானோ இந்த சீசாவுக்குள் அடைந்து கிடக்கிறேன். எனக்கென்று ஒரு வடிவம் ஏற்பட்டு விட்டது. இந்த சீசாவின்

சொந்தக்காரனுக்கு நான் ஆட்பட்டிருக்கிறேன். நான் தெய்வமில்லை' என்று நழுவிக் கொண்டது சீசா தண்ணீர்.

ஓகோ! வடிவமில்லாது இருந்தால்தான் தெய்வம் போலும். சொந்தபந்தமில்லாத தண்ணீர் தான் தெய்வமாக இருக்கமுடியும் என்று சீடன், சிந்தனை செய்தவாறு போய் கொண்டிருந்தான்.

எதிரே ஏரி ஒன்று தெரிந்தது. அவன் மனம் நினைவுக் குவியலாக நெளியத் தொடங்கியது.

இந்த ஏரி யாருக்கும் சொந்தமில்லை. இந்த நீருக்கு வடிவமும் இல்லை. ஆகவே, இதுதான் தெய்வம் என்று எண்ணி ஒரு முடிவுக்கு வந்தவனாக, ஏரியிடம் சென்று தண்ணீரைப் பார்த்து தெய்வமே என்று வணங்கினான்!

ஏரித் தண்ணீர் அவனை ஏற இறங்கப் பார்த்தது. தன்னைப் பற்றி புரியாமல், 'தெய்வமே' என்று அழைக்கும் அவனைப் பார்த்து - அழுவதா சிரிப்பதா என்று புரியாமல் முணுமுணுத்தது.

தெரியாமல் என்னை அழைத்து விட்டாய். நான் தெய்வமில்லை. தெய்வத்திற்கு எல்லையில்லை என்பது உனக்குத் தெரியாதா! ஒரு கட்டுக்கள் அடங்காது, எல்லாவற்றையும் கடந்தது தானே கடவுள் என்பது! ஒரு கட்டுக்குள், ஒரு எல்லைக்குள், ஒரு வரையறைக்குள் ஊசலாடிக் கொண்டிருக்கும் என்னைப் பார்த்தால், உனக்குத் தெய்வமாகவா தெரிகிறது என்றது ஏரிநீர்!

உண்மைதான். சீடனுக்கு சித்தத்தில் சற்று உறைக்க ஆரம்பித்தது. 'எல்லையில்லாமல், எல்லாவற்றையும் கடந்தவன் தானே கடவுள். இது தெரியாமல், இந்தத்

தண்ணீரை தெய்வம் என்று அழைத்து விட்டோமே! தவறுதான்' என்று தன்னிலை மாறி, தன் பயணத்தை மேலும் தொடர்ந்தான்.

சீடன் மனதிலே சிறுசிறு சலனங்கள். தான் என்ன செய்யலாம் என்று புதிர் போட்ட பயணத்தின் நடுவிலே. எதிரே வற்றாத ஜீவநதியாக ஓடிக் கொண்டிருந்த ஒரு ஆற்றைப் பார்த்தான். மீண்டும் அவனுக்கு சலனங்கள்.

இதுவரை எதிர்த்துப் பேசப்பட்ட எல்லா தடைகளையும் விட்டு, மீறி நிற்கிறது இந்த ஆறு. ஆக இதுதான் தெய்வம் என்று முடிவு செய்தவனாக, ஆற்று நீரைப் பார்த்து, தெய்வமே என்று அழைத்தான்.

அவனை வியந்து நோக்கியது ஆற்று நீர். விவரம் இல்லாத மனிதனாக அல்லவா இந்த மனிதன் விளங்குகிறான். அவனுக்கு எப்படி எடுத்துரைத்தால் தெளிவாகும் என்று அவனை நோக்கியது.

''மனிதா! கடவுளுக்கு முதலும் இல்லை. முடிவும் இல்லை என்பதை நீ அறிவாயல்லவா! எனக்கோ தொடக்கம் இருக்கிறது. கடைசியில் கடலோடு கலக்கும் முடக்கமும் இருக்கிறது. நான் எந்த விதத்தில் பொருத்தமானதாக உன் அறிவுக்குப் படுகிறது. ஆகவே, என்னை இனிமேல் தெய்வம் என்று அழைக்கின்ற தவறைச் செய்யாதே'' என்று ஆற்று நீர் அவனை ஆற்றுப் படுத்தியது.

புரிந்து கொண்டான் சீடன். 'இனி, போகும் திசைதான் என்ன? புத்தியில் அலையாக சிந்தனைகள் புரண்டன. முடிவு! கடல் என்று ஒன்று இருப்பது

அவனுடைய நினைவுக்கு வந்தது. ஆகவே, காலம் தாழ்த்தாமல் கடலை நோக்கிப் புறப்பட்டான்.'

கடுகிவந்த அவனை கடல் வரவேற்றது. பெருகி வந்த பெருமூச்சை நிதானமாக விட்டபடி, தான் நினைத்து வந்த சேதியை, நன்கு சிந்தித்து, ஒரு முடிவெடுத்துக் கொண்டு பேச ஆரம்பித்தான் சீடன்.

கரை தெரியாத, ஒரு கட்டுக்கடங்காத. முதலும் முடிவும் இல்லாத, யாருக்கும் அடிமையாகாத, ஒரு சுதந்திர இயக்கத்தில் நிரந்தரமாக இருக்கும் இந்நீரல்லவோ தெய்வம். அது அப்படித்தான் இருக்க வேண்டும். ஆகவே, தைரியமாக இந்தத் தண்ணீரை தெய்வம் என்று அழைக்கலாம். என்று முன் யோசனையுடன் முடிவெடுத்து, கடல் நீரை அழைத்தான்.

கடல் நீரின் பதில் அவனை திகைக்க வைத்தது.

'உன்னுடைய சிந்தனை சரிதான். எனக்கு முதலும் முடிவும் இல்லை. தொடக்கமும் முடக்கமும் இல்லை. ஒருகரை தெரிந்தால் எதிர் கரை தெரியாது. ஆனால், என்னைப் போய் தெய்வம் என்று சொல்ல. உன் மனம் எப்படி துணிந்தது! நான் தெய்வத்தின் ஒரு கூறுதான். அது சிந்திய கருணைதான் நான்.'

தெய்வம் என்பது உன்னைத் தேடி வருவது. நீ தேடி அலைந்தால் உன் கைக்கு அகப்படாது. அதுவும் சுகப்படாது. ஆகவே, எது தெய்வம், எப்பொழுது தெய்வம் என்பதை நீ தேடினால் தெரிந்து கொள்ள முடியாது. உன்னைத்தேடி வரும் பொழுது. நீ புரிந்து கொள்வாய் என்று தத்துவம் பேசிய வித்தகத்தில் தாவித் தாவிக் குதித்து அலையாய் புரண்டது கடல்.

ஒடுங்கிப்போனான் சீடன். உள்ளம் ஒடிந்தும் உடைந்தும் போனதுதான் காரணம். இனி என்ன செய்வது? கடலே கையை விரித்து விட்டது அவனுக்கு பெரிய கவலையாகப் போய்விட்டது.

உலகத்தின் முக்கால்பகுதியை விழுங்கி சம்காரம் செய்து கொண்டிருக்கும் கடலே தன்னை தெய்வமில்லை என்று கழற்றிக் கொண்டு விட்டபிறகு, தெய்வத்தை எப்படிப் பார்ப்பது? தெரிந்து கொள்வது? எப்பொழுது தெய்வம் என்னைத் தேடிவரும்? அதற்காக நான் என்ன செய்ய வேண்டும்?

இந்தச் சிந்தனைகள் அவனை சித்ரவதை செய்து கொண்டிருந்தன. செய்வது தெரியாமல் சிதைந்து போய்க் கொண்டிருந்தான். முடிவு! 'சித்தம் போக்கு சிவன் போக்கு' என்பார்களே, அதுபோல அவன் மனம் போன போக்கிலே போய்க் கொண்டேயிருந்தான்.

உச்சிவெயில் உக்ரமமாகக் காய்ந்து கொண்டிருக்கும் நண்பகல் நேரத்தில், பொறி பறக்கும் கடுமணல் பாய்விரித்த பாலைவனத்தில் நடந்து போய்க் கொண்டிருந்தான் சீடன். எவ்வளவு வேகமாக நடந்தாலும், எதிரே வெறும் மணற்காடுதான் பரப்பிக்கிடந்ததே தவிர; ஒதுங்கி நிற்க ஒரு மரமோ, சிறு நிழலோ எதுவும் கிடையாது.

நின்றால் பாதங்கள் சுடுகின்றன. நடந்தால் பாதங்கள் நோகின்றன. கீழும் மேலும் கடும் அனலால் வேகின்றன. தவித்துப் போனான் சீடன். களைத்துப் போனான். வெள்ளமாக வியர்வை வெளியேறிக் கொண்டிருந்தது. வெளிறிபோய்க் கொண்டிருந்தான் சீடன்.

தாகம் அவனை புரட்டி எடுத்துக் கொண்டிருந்தது. நாவோ வரண்டு போய்விட்டது. ஈரம் ஆக்கிக் கொள்ளலாம் என்றாலோ எச்சிலும் வாயில் இல்லை. உலர்ந்து போய்விட்டது.

உள்ளும் புறமும் இனி நடக்கமுடியாது என்ற நிலைமாறி. இனிமேல் ஒரு சொட்டு தண்ணீர் இல்லாவிட்டால். உயிர் பிழைக்க முடியாது என்ற நிலையில் கீழே விழுந்தான் சீடன்.

கண்கள் நிலைகுத்திக்கொள்வதுபோல் பிதுங்கிக் கொள்ள தடுமாறிப் புரண்டான். தெய்வத்தைத் தேடித்திரிந்தேன். அந்த முயற்சியால் ஒரு அங்குலம் கூட முன்னேற முடியாமல் அநாதையாக இந்தப் பாலையில் சாகிறேன்! தெய்வமே! தெய்வமே என்று மண்ணில் சாய்ந்தான். மேலும் மணலில் சரிந்தான்.

வெயிலின் வேதனையில் கிடந்தவனைக்கண்டு, கலங்கிப் போனதோ என்னவோ, அந்த வானம் வாட்டத்தால் கருத்தது. கருமேகங்கள் கரும்போர்வை போர்த்தியதுபோல் வந்து சூழ்ந்து கொண்டன. இடி இடித்தது, மின்னல் மின்னியது. திடீரென்று ஒருசில தூரல்கள் கண்ணீர்போல் உதிர்ந்தன.

வாய் பிளந்து கிடந்த சீடன் வாயில் சில நீர்த்துளிகள் சீடனின் நாவை நனைத்தன. வாய் ஈரம்பெற்றுக் கொண்டது. நாவோ பேசும் அளவுக்கு தெம்பினைப் பெற்றது.

'தெய்வமே' என்னை நீ காப்பாற்றிவிட்டாய்! என்று சீடனின் கைகள் வானை நோக்கி வணங்கின.

தெய்வத்தைக் கண்டு கொள்ள வேண்டும் என்று குருநாதரைக் குடைந்தெடுத்த போது அவர் கூறிய மொழிகள் சீடன் காதுகளில் இப்போது ஒலித்தன.

தேடித்திரிய வேண்டாம் மகனே! அவரே உன்னைத் தேடி வருவார்!

ஆமாம்! தெய்வம் தண்ணீர் வடிவத்தில் ஓடி வந்து. என்னைக் காப்பாற்றி விட்டது. சீடன் சிந்தை தெளிந்தது. உள்ளமும் உணர்வுகளும் உவகையில் கலந்து கூத்தாடின.

தண்ணீர் மட்டுமா தெய்வம்! பஞ்ச பூதங்கள் அனைத்தும் தெய்வம் என்றுதானே எல்லோரும் நம்புகின்றார்கள். நீர், நெருப்பு, நிலம், காற்று எல்லாமே தெய்வங்கள் என்றுதானே வணங்குகின்றார்கள். விழா எடுக்கின்றார்கள்!

இயற்கையாக, இலவசமாகக் கிடைப்பது என்று பஞ்ச பூதங்களையும் நாம் நினைத்து மகிழ்ந்தால், அதே போல் இயற்கையாக எழும் உணர்வுகளுக்கு ஏற்ப, இலவசமாகக் கிடைப்பது விளையாட்டும் அல்லவா.

தேடிப்போனால் தான் தெம்பும் சிறப்பும், செழிப்பும் ஊட்டும் என்பதில்லை. தேடிவந்தும் திரவியமாக உதவுவது விளையாட்டுக்கள் அல்லவா! அவற்றை நாம் ஏன் எதிர்க்கிறோம்? ஏன் உதாசீனப் படுத்துகிறோம்! ஏன் வெறுத்து ஒதுக்குகிறோம்! விதண்டா வாதங்கள் பேசுகிறோம்!

தெய்வமாகத் தண்ணீரை நினைக்காவிட்டாலும் தேவைகளைத் தீர்த்து சுகப்படுத்துகின்றது என்று நாம் அதனை வாழ்த்தவில்லையா! வணங்கவில்லையா

அதுபோல, உற்றுழி உதவும் விளையாட்டுகளை ஏன் நாம் ஏற்கக் கூடாது!

தெளிவடையாத சீடன்போல்தான், விளையாட்டைப் பொறுத்தவரையிலும் பெரும்பாலான மக்கள் நம்மிடையே இருக்கின்றார்கள்.

வாழ்வில் வளம் சேர்க்க மட்டுமல்ல, வழிநடைப் பயணத்திலும் மலர்ச்சியையும் எழுச்சியையும் ஊட்டக்கூடிய உன்னதத் துணையாக அல்லவா விளையாட்டுக்கள் விளங்குகின்றன!

தெரிந்த துணையாக, தெய்வாம்சமாக விளையாடும் விளையாட்டுக்கள் ஓடிவந்து உதவுகின்றன. தேவையென்று ஏற்றுக்கொண்டோர். திகைப்படையாமல் பெற்றுக்கொண்டோர். தெய்வம்போல் மனமார ஒப்புக்கொண்டோர் அனைவரும், மற்றவர்களைவிட, மனம் போல் வாழ்வு, வாழ்ந்து மகிழ்கின்றார்கள்.

தெளிந்த சிந்தனை பெற்ற சீடனைப் போல, மக்கள் மாறும் காலம்வரும் என்பது மட்டும் தெரிந்த உண்மைதான். அது எப்பொழுது என்பதில்தான் அவகாசம் இருக்கிறதே தவர, நிச்சயம் நடக்கும் என்ற நம்பிக்கை மட்டும் குறையாமல் நிறைந்து கொண்டே போகிறது.

காலத்திற்காகக் காத்திருப்போம், ஓடிவந்து உதவாமலா போகப் போகிறது!

# 18. ஓட்டமும் விளையாட்டும்

'பாட்டுக்கொரு புலவன் பாரதி' என்று எல்லோராலுமே பாராட்டப் பெற்ற மகாகவி பாரதி. புகாத துறைகள் இல்லை; பாடாத பொருள்கள் இல்லை.

வேதாந்தத் துறையையும் தொட்டான். விஞ்ஞானத் துறைகளையும் சொன்னான். அதுபோலவே விளை யாட்டுத் துறையிலும், விம்மிதம் நிறைந்த கருத்துக்களை, மிகமிக விளக்கமாகச் சொன்னான்.

அத்தனை பாட்டுக்களிலும் அற்புதமான பாடல் ஒன்று. குழந்தைகள் முதல் கிழவர்கள் வரை கொண்டாடி மகிழும் பாட்டு அது. சொல்லும்போதே உள்ளத்தில் பதிகின்ற எளிமை. உணர்வுடன் கலக்கின்ற இனிமை... சொல்லி மகிழ்ந்து துள்ளி ஓடச் செய்யும் வலிமை கொண்ட வரிகள்தான் அவை.

ஓடி விளையாடு பாப்பா - நீ

ஓய்ந்திருக்கலாகாது பாப்பா

கூடி விளையாடு பாப்பா - ஒரு

குழந்தையை வையாதே பாப்பா!

மேலே காணும், நான்கு வரிகளைப் படிக்கும் பொழுது மேலோட்டமாக, நீரில் மிதக்கும் கப்பலைப் போல நிமிர்ந்து நின்று கவர்ச்சித் தோற்றம் அளிக்கும் கருத்துக்கள். நீருக்குள் அமிழ்ந்து இருந்து, கப்பலைத் தாங்கி நிற்கும் அடித்தளப் பொருட்கள் போல ஒவ்வொரு சொல்லும் அற்புதமான அறிவியல்

கருத்துக்களை அல்லவா புதையலாகப் பொதிந்து நிற்கின்றன.

பாப்பா என்று அழைத்தான் பாரதி! பெரியவர்களைப் பார்த்து விளையாடு என்று சொல்லாமல், பாப்பாவைப் பார்த்து விளையாடு என்றானே! ஏன்? தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும் என்பார்களே! அதுபோல்தான்.

இளமையில் கல்; ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமோ என்ற பழமொழிகளுக்கேற்ப, விளையாடும் விதங்களையும், வித்தைகளையும், இளமையிலேயே கற்றுக் கொண்டால், அது என்றென்றும் தொடர்ந்து வரும், நீடித்து நிற்கும் என்ற கருத்தில்தான் பாப்பாவைத் தேடிச் சொன்னான்.

விளையாடுகின்ற இயல்பூக்கங்கள் குழந்தைகளின் உணர்வுகளிலே ஊறிக் கிடக்கின்றன. அவை இயல்பான உணர்ச்சித் தூண்டல்கள் என்பதால், ஊற்றாக ஊறி, அருவியாய் குதித்து, அலையாய் புரண்டெழும் உணர்வூக்கங்களைத் தடை செய்யக் கூடாது என்பதற்காகத் தான் இயற்கை அளித்த ஆற்றலை ஏற்று மகிழ்ச்சி கொள் என்பதற்காக பாப்பாவிடம் கூறுகிறான்.

**'விளை'** என்பதற்கு 'விருப்பம்' என்று பொருள் கூறுவார்கள். **''விருப்பமாய் ஆடுவதைத் தான் விளை யாட்டு''** என்றனர். உடலுறுப்புக்களை விருப்பம்போல் இயக்கி மகிழ்வதையும். விளையாட்டு என்றே அழைத்தார்கள் நமது முன்னோர்கள்.

உணர்வுகள் இருக்கின்றன. உள்ளமும் இருக்கிறது. கவலைகளே கண்முன்னே வராத காலமாய் இளமைக்

காலம் இருக்கிறது. அதைக் கண்டு மகிழ அன்புப் பெற்றோர்கள். பாராட்டும் பார்வையாளர்கள் இருக்கிறார்கள். அதனால் தான் விளையாடு பாப்பா என்றான் பாரதி.

விளையாட்டை இரு வகையாகப் பிரிப்பார்கள் வல்லுநர்கள். **உடலியக்க விளையாட்டு. மூளை இயக்க விளையாட்டு** - என்ற இரு வகையில், சதுரங்கம், கேரம், சீட்டாடுதல் போன்றவை உட்கார்ந்து, மூளைத் திறனை இயக்கி ஆடக்கூடிய ஆட்டங்களாகும். மற்ற விளையாட்டுக்கள் ஏறத்தாழ எல்லாமே உடலியக்க விளையாட்டுக்களாகும்.

உடலியக்க விளையாட்டுக்கள்தான் குழந்தைகளுக்கு ஏற்றவை என்று, உணர்ந்த பாரதி, ஓடி விளையாடு என்று அறிவுரை கூறுகிறான். ஏனென்றால் ஓடுவதில் உள்ள சுகமும் நலமும். வேறெந்த மருந்திலோ மாயத்திலோ கிடைக்காது என்பதை உணர்ந்திருந்தான் போலும்.

ஓடுவதை விரைவாக ஓடுதல் என்றும், மெதுவாக ஓடுதல் என்றும் நாம் பிரிக்கலாம். விரைவாக ஓட்டம் என்பதை Running என்கிறோம். மெதுவாக அதாவது நடப்பது போல ஓடுகின்ற நடை ஓட்டத்தை Jogging என்கிறோம்.

வளமாக வாழ நடை ஓட்டம் வேண்டும். வளத்துடன் நீடூழி வாழ. ஒருவர் ஓடித்தான் பெற வேண்டும்! என்கிறார் மேல் நாட்டறிஞர் ஒருவர்.

ஓட்டமானது உடலிலுள்ள கலோரி சத்துக்களை உண்டு விடுகிறது. அதனால் உடல் விசை பெற்று விளங்குகிறது. இதயம், நுரையீரல் ஏற்றமுடன் செயல்படத் தூண்டுகிறது. இரத்தம் விரைவோட்டம் பெறுகிறது. இதயத் துடிப்பின் சக்தி பெருகுகிறது. உடல் வெப்பத்தை உண்டு பண்ணி வியர்வையை வடித்து. கழிவுப் பொருட்களை விரைவாக வெளியேற்றி, உடலை சீர்படுத்துகிறது. செப்பனிடுகிறது. செழுமைப் படுத்துகிறது.

அதனால்தான், துள்ளிக் குதிக்கும் பிராயத்தில் ஓடி விளையாடு என்றான் பாரதி. உட்கார்ந்து விளையாட ஒருகாலம் இருக்கிறது. உண்மையான வாழ்வு வாழ ஓடித்தான் விளையாட வேண்டும். அதிலே தான் உன் உயர்ந்த எதிர்காலம் உரம் பாய்ந்து கிடக்கிறது என்கிறான் பாரதி.

ஓடி விளையாடிய உடலும் உள்ளமும் எப்பொழுதும் சுறுசுறுப்பாக இருக்கும். கலகலப்பாகவும் இருக்கும். அந்த அற்புத ஆற்றல் நிலையை அரிய காரியங்களுக்கும், உரிய உதவிகளுக்கும் பயன்படுத்திக் கொண்டால், வாழ்க்கையில் முன்னேற்றம் நிச்சயம் கிடைக்கும். ஆனால், ஒன்றுமே செய்யாமல், செயல்படாமல் ஓய்ந்திருந்தால் என்ன ஆகும்? **'சோம்பேறியின் மூளை சைத்தானின் தொழிற்சாலை'** என்பார்கள். அப்படித்தான் ஆகும்.

தேங்கிய நீர் தூய்மையிழப்பதுடன், தீய கிருமிகள் தோன்றவும், தீமைகளை, விளைவிக்கும் குளமாகவும் போய் விடுகிறது. ஆனால். ஓடுகின்ற நீரோ.

தூய்மையாய் இருக்கிறது. நாடி 'வருவோர்க்கெல்லாம் நல்லது செய்து கொண்டே நன்மை தருகிறது.' புகழைப் பெறுகிறது.

அந்த இயல்பினை அறிந்த பாரதி, எப்பொழுதும் ஓய்ந்திருக்க வேண்டாம். உண்ணவும் உறங்கவும் கூடிய நேரம் தவிர, உழைப்பில் நாட்டம் கொள். முயற்சியில் ஊட்டம் கொள், முன்னேற்றப் பாதையில் முனைந்து செல் என்கிற லட்சிய வெறியை உண்டாக்கும் வழிகளில் ஓய்ந்திருக்கலாகாது என்கிறான்.

உற்சாகமாக ஓடி விளையாடுகின்ற குழந்தைகள். தனித்தே ஆடிட முடியுமா? அதில் இனிமை தான் பெற்றிட இயலுமா? பலருடன் சேர்ந்து விளையாடினால் தானே, பண்புகளைக் கற்றுக் கொள்ள முடியும்? 'மனிதரை கூடி வாழும் மிருகம்' என்று சமூக நூல் வல்லுநர்கள் கூறுவார்கள்.

கூடி வாழும் குல வித்தையை இளம் வயதிலிருந்தே கற்றுக் கொள்ளும் வாய்ப்பினையும். வளமான வழிகளையும் விளையாட்டு ஒன்றே அளிக்க முடியும் என்பதை பாரதி அனுபவபூர்வமாக உணர்ந்திருப்பதால் தான், கூடி விளையாடு பாப்பா என்கிறான்.

கூடி விளையாடும் பொழுது. 'தான்' என்கிற அகந்தைக் குணத்தைத் தள்ளிவிட நேரிடுகிறது. மற்றவர்களுடன் மனதாலும் செயலாலும் ஐக்கியம் ஆகிட முடிகிறது. தன் திறமையை மற்றவர்களுக்கு வெளிப்படுத்திக் காட்டி மகிழ முடிகிறது. வேண்டும் பொழுது, பிறர் திறமைகளுக்கு ஈடாக தன் திறமையை யும் வளர்த்துக் கொள்ளத் தூண்டுகிறது.

அவ்வாறு கூடி விளையாடும் பொழுது, மொழி, இனம், மதம், சாதி, ஏழ்மை, செல்வத்தன்மை எதுவும் அங்கே எடுபடுவதில்லை. இத்தனை பயன்களையும் கூடி விளையாடும் பொழுது தான் கற்றுக் கொள்ள முடிகிறது. வளர்த்துக் கொள்ள முடிகிறது.

இவ்வாறு திறமையைக் காட்டும். தருணத்தில், மோதல் ஏற்படுவதுண்டு. பிரிவும் பிளவும் பகையும் கூட நேர்வதுண்டு. அப்பொழுது, விவேகம் மறைந்து வேகம் கொள்வதும் நெறி முறை பிறழ்ந்து வெறி கொள்வதும், இயற்கை தானே! ஆத்திரம் அறிவுக்குச் சத்துரு. ஆணவம் அன்புக்கு எதிரி என்கிற கொள்கையை அறிந்து, கோபப்படும் பொழுது பொறுமை காட்ட வேண்டும், பகைவராக எண்ணாமல், அருள் காட்டி அன்பு காட்ட வேண்டும். குறை காண வேண்டாம். கோபப்படவேண்டாம். கூட விளையாடுபவரை வைது வம்பு செய்ய வேண்டாம். மனம் புண்படுத்த வேண்டாம் என்று அறிவுரை கூறுகிறான் கவிஞன்.

இன்றைய குழந்தைகள் நாளைய தலைவர்கள், நல்லதோர் சமுதாயம் படைக்கும் இளைஞர்கள் என்றெல்லாம் நாம் கூறுகிறோம். இளமையிலேயே அவர்களை இதத்தோடு பழக்கி விட்டால். பதத்தோடு வளர்த்துவிட்டால், எதிர்காலம் இனிய காலமாகத் தானே இருக்கும்? அதைத்தான் முன்னுணர்வும் மூதறிவும் நிறைந்த கவிஞன். மனம் நெகிழ்ந்து பாடினான்.

'இளமையிலேயே குழந்தைகளைப் பிடியுங்கள், பயிற்சி தாருங்கள்' என்று கொள்கையாகப் பேசி,

கோட்டைகள் பல கட்டி, காரியங்கள் செய்ய திட்டங்கள் பலதீட்டுகிறோம். அதை அன்றே பாடி வைத்தான் பாரதி.

பாலர்கள் படிக்கும் பள்ளிகளிலே அவர்கள் ஓடவும். விளையாடவும், ஓய்ந்திருக்காமல். கூடி விளையாடும் வாய்ப்பை நாம் கொடுத்திருக்கிறோமா என்றால், இல்லை என்றே கூறலாம். பள்ளி இருந்தால் விளையாட இடம் இல்லை; விளையாட இடம் இருந்தால், விளையாட்டு ஆசிரியர்கள் இருந்தால், வேண்டிய விளையாட்டுப் பொருட்கள் இல்லை. அவர்களுக்குள் ஆடி மகிழ கற்றுக் கொள்ள வாய்ப்புக்கள் இல்லை என்ற சூழ்நிலைகளையே இன்னும் எங்கும் காண முடிகின்றது.

பாரதி பாடிய பாட்டு பொருள் பொதிந்த பாட்டு. சமுதாய எதிர் கால இருள் நீக்கும் பாட்டு. சக்தி நிறைந்த அருள் நிரம்பிய சமுதாயத்தைப் படைக்கும் பாட்டு. நல்ல உடல்களை வளர்ப்பதிலும். நல்ல இனங்களை வளர்ப்பதிலும் நல்ல மனங்களைப் பெறுவதிலும் நாட்டம் கொள்வோம். நாடு உயரும். நல்லமைதி நிலவும். நாடி பல இன்பங்களை எல்லோரும் எப்பொழுதும் பெறலாம். இந்த இனிய இலட்சியம் நோக்கி இன்றே நடை பயில, செயல்பட எல்லோரும் முயல்வோமாக!

# 19. நீ - நீர் - நீங்கள்

கடல் அலைகளையே பார்த்துக் கொண்டிருந்தார் அந்த பெரியவர். வா தாத்தா போகலாம்! என்று அவரது கையைப் பிடித்து இழுத்தான் அவரது பேரன்.

பொறுப்பா போகலாம்! நீ இந்த தண்ணீரைப் பார்க்க வில்லையே! என்ன அழகாக இருக்கிறது. ஆடிக் குதிக்கிறது. பார் என்றார் பெரியவர்.

அழகாக இருந்து என்ன புண்ணியம்! தாகமாயிருக்கிறது என்று வாயிலே தண்ணீரை வைத்தேன். ஒரே உப்பு. சீ! உபயோகப்படாத பொருள் என்ன பொருள்? என்று பேரன் தன் வெறுப்பைக் கடலிடம் காட்டினான்.

தாகத்தைப் போக்கியாக வேண்டுமே என்று தாத்தாவும் புறப்பட்டு விட்டார். கொஞ்ச தூரம் வந்தாகி விட்டது. அங்கே மணற் பரப்பில் ஊற்றைத் தோண்டி, தண்ணீர் எடுத்துக் கொண்டிருந்தார்கள் சிலர்.

அந்த சிறுவன் ஆவலாக ஓடிப் போய். குடிக்கத் தண்ணீர் கேட்டான். அவர்களும் முகம் சுளிக்காமல் தந்தார்கள். வேகத்தோடு சட்டையெல்லாம் நனைந்து போகும். அளவுக்குத் தாகத்தைத் தீர்த்துக்கொண்டான்.

இதுவல்லவோ தண்ணீர்! இப்படித்தான் பயன்பட வேண்டும். என்னவோ கடலைப் பார்த்து ஆச்சரியப் பட்டீர்களே தாத்தா? இந்த ஊற்றைப் பார்த்துக் கொஞ்சம் புகழக் கூடாதா? என்றான் சிறுவன்.

நீ சொல்வது உண்மைதான். உப்புத் தண்ணீர் பட்ட நாக்கிலே ஊற்றுத் தண்ணீர் விழுந்ததும், உவப்பாய் இருக்கிறது. நீ சொல்வதிலும் நியாயம் இருக்கிறது. ஒத்துக் கொள்கிறேன். வா போகலாம் என்று அழைத்து விட்டு மெதுவாக நடந்தார்.

துள்ளிக் குதித்தவாறு முன்னே ஓடிய சிறுவன் திடீரென நின்றான். கைக்குட்டையை எடுத்து, மூக்கை அடைத்துக் கொண்டான். திரும்பி தாத்தாவிடம் ஓடி வந்தான்.

நாற்றம் சகிக்கவில்லை. குடலைப் பிடுங்குகிறது. சீக்கிரம் வாருங்கள். அதைக் கடந்து போய் விடலாம் என்றான். என்ன காரணம்? ஏதாவது மிருகம் இறந்து கிடக்கிறதா? என்றார் பெரியவர்!

இல்லை, இல்லை, ஆறு மாதிரி ஒன்று இருக்கிறது. அதில் உள்ள தண்ணீர் தான் அப்படி நாறுகிறது. இந்த இடத்தில் உள்ளவர்கள் எப்படித்தான் வாழ்கிறார்களோ? இந்த நாற்றத்தை சகித்துக் கொள்கின்றார்களோ?

இந்த ஓடாத அல்ல அல்ல, ஓடிக் கொண்டிருக்கும் ஆற்றுக்குப் பெயர் கூவம் என்பது. புரிகிறதா என்றார் பெரியவர்.

புரிகிறது புரிகிறது என்று கையைப் பிடித்துக் கொண்டு ஓடினான். நாற்றத்தை அவனது மூக்கு ஏற்றுக் கொள்ளாமல் விரட்டியடித்தது.

பெருமூச்சு விட்டபடியே நின்ற தன் பேரனை வந்து பிடித்துக் கொண்டார் பெரியவர்.

கடலை வெறுத்துப் பேசினாயே! கூவத்திற்கு நீ என்ன பதில் சொல்கிறாய் என்றார் அவர்!

அய்யய்யோ தாத்தா! என்னால் முடியாது. கடலே பரவாயில்லை. காட்சிக்கு அழகு. அலைகளோ ஆனந்தம். வாயிலே ஊற்றிக் கொள்ள வேண்டுமென்று கடல் வற்புறுத்த வில்லையே! கடலுக்கு வக்கீலாகப் பேசினான் பேரன்.

கடலுக்கு முந்நீர் என்ற பெயர் தெரியுமா உனக்கு? பெரியவர் தன் மனதில் உள்ளதைப் பேச ஆரம்பித்தார். 'ம்' 'ஹூம்' என்றபடி பேரன் தன் தாத்தாவின் முகத்தைப் பார்த்தான். ஆமாம்! ஆற்று நீர். ஊற்று நீர், மழை நீர் மூன்றும் சேர்ந்து தான் கடல் நீராகிறது. காரணம் என்னவோ தெரியவில்லை. அது உப்பு நீராகிப் போகிறது.

நல்ல நீராகத் தான் பிறந்த இந்த மூன்று நீர் வகையும் கடலோடு சேர்ந்த பிறகு. உப்பு நீராக மாறுகிறது. பிறக்கின்ற குழந்தைகள் பரிசுத்தமாகப் பிறந்து, சமுதாயத்தோடு சேர்வதுபோல.

கடல் நீர் ஆவியாக மாறி, மேகமாக அலைந்து, மழையாகப் பொழிந்து மண்ணுக்குள் அடங்கி, ஊற்று நீராக வெளி வரும் பொழுது. உண்ணும் நீராக வருகிறது. சமுதாயத்தின் கட்டுப்பாட்டுக்குள் அடங்கி, சக்தியால் சாகசம் புரிந்து, ஆற்றல்களை வெளிப்படுத்தி, அனுபவத்தால் முன்னேறி, அனைவருக்கும் உதவுகின்ற அறிஞர்கள் போல.

எதிலும் மனத்தை பறிகொடுத்து விட்டு எப்படியும் வாழலாம் என்று இலட்சியக் கணக்கு போட்டு, சந்தை

மாடுபோல் திரிந்து சகதிக் குணங்களில் புரண்டு. சகலரும் வெறுக்கின்ற கூவம் போல ஆகின்ற மக்களும் உண்டு.

தம்மால் பிறருக்கு உதவியில்லாவிட்டாலும், பிறரை மதித்து மகிழ்விக்கின்ற பொதுமக்கள் போல, கடல் நீர் உதவுகிறது. இப்படியெல்லாம் பேசினார் தாத்தா!

நமது உடலையும் பார். உழைத்து வியர்வையாக வரும் நீர் உப்பு நீர், வாயில் ஊறும் உமிழ்நீரோ சுவை நீர். புண்ணிலிருந்தும் கட்டியிலிருந்தும் வழியும் நீரோ நாற்றநீர். நமது உடம்பையும் முந்நீர் உலாவும் புதிய உலகம் என்றும் கூறலாம் அல்லவா!

சிறுவனுக்கும் புரிந்ததோ என்னவோ. தலையை ஆட்டினான். தன் மனதில் உள்ளதை வெளிப்படுத்த வாய்ப்பு கிடைத்ததற்காகப் பெரியவர் பேரானந்தம் அடைந்தார்.

பயன்படாதது நீயாகவும், பயன்படுவது நீராகவும், அதிகப் பயன்படுவது நீர்கள், என்பது தான் நீங்கள் என்று ஆயிற்றோ என்றார் அவர். நீர் என்பது மரியாதைக் குரியது. நீங்கள் என்பது அதிக மரியாதை அல்லவோ!

நம்மை பிறர் நீங்கள் என்று அழைக்க வேண்டும் என்று விரும்பினால் நாமும் மற்றவர்க்கு மேலாக இருக்க வேண்டும். அப்படித்தானே! அதுவே நமது இலட்சியம்!

∴ ∴ ∴

